KALKI 21.2.88 ரூ. 2.

# கல்கி

## இன்றையச் சூழலில் தி.மு.க.

— கருணாநிதி சிறப்புப் பேட்டி

டாக்டர் அம்பேத்கார் ''இந்துமதத்துப் புதிர்கள்'' (**Riddles of Hindulsm**) என்ற தலைப்பில் எழுதிய ஒரு புத்தகம் பம்பாயில் ஒரு பெரிய சர்ச்சையை ஏற்படுத்தியுள்ளது. அப் புத்தகத்தில் இந்து கடவுள்களான இராமர், கிருஷ்ணர் ஆகியவர்களைப் பற்றி ஆஸ்திகர்கள் மனம் புண்படும்படி சில வினாக்களை எழுப்பியிருக்கிறார் டாக்டர் அம்பேத்கார்.

மகாராஷ்டிர அரசாங்கம் அப்புத்தகத்தை வெளியிடத் தீர்மானித்த போது இந்துமதக் காப்பாளனாகத் தன்னை இப்போது காட்டிக் கொள்ளும் சிவசேனா, அதற்குத் தீவிர எதிர்ப்புத் தெரிவிக்கத் தொடங்கியது.

ஆனால் தலித்பேந்தர்ஸ் என்ற தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினரின் ஓர் அணி டாக்டர் அம்பேத்காரின் எழுத்துக்களை மாற்றாமல் அப்படியே வெளியிட வேண்டும் என்று அரசாங்கத்தை வற்புறுத்துகிறது. இந்தப் புலிகளின் அணிக்குத் தலைமையை பிரகாஷ் அம்பேத்கார் (டாக்டர் அம்பேத்காரின் பேரன்) ஏற்றுக் கொண்டிருக்கிறார்.



எஸ். பி. சவான்

# பம்பாயில் பதற்ற நிலை...

பிப்ரவரி 5—ம் தேதி வெள்ளியன்று பம்பாயில் தலித்பேந்தர்ஸ் சுமார் மூன்று லட்சம் பேர்களடங்கிய மாபெரும் ஊர்வலத்தை நடத்திச் சென்றது. பம்பாயின் வியாபார மையப் பகுதியான ஃப்ளோரா ஃபவுண்டனில் உள்ள தியாகிகள் நினைவுச் சின்னம் அப்போது சேதப்படுத்தப்பட்டது. அந்த நினைவுச் சின்னம் பம்பாய் முனிசிபல் கார்ப்பரேஷனில் ஆட்சி செய்து கொண்டிருக்கும் சிவசேனாவினால் நிறுவப்பட்டது.

சிவசேனா மற்றும் தலித் பேந்தர்ஸ் எதிரெதிர் அணியில் இப்போது இருப்பதால் இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு பம்பாயில் ஓரளவு பதற்ற நிலை பரவியுள்ளது. இரு சாராருக்கும் இந்தப் புத்தகப் போர் ஒரு கௌரவப் பிரச்சினையாக மாறிக் கொண்டு இருக்கிறது.

தலித் பேந்தர்ஸின் ஊர்வலம், பொங்கலன்று சிவசேனா நடத்திய இரண்டு லட்சம் பேரடங்கிய கூட்டத்துக்குப் பதிலடியாக விளங்கியது.

இரு சாராரையும் திருப்திப்படுத்த எண்ணி இப்போது மகாராஷ்டிர அரசு ஒரு யுத்தியைக் கையாண்டிருக்கிறது. அதாவது அம்பேத்காரின் புத்தகத்தை மாற்றங்கள், நீக்கங்கள் ஏதுமின்றிப் பிரசுரிப்பது என்றும் அதே நேரத்தில் அந்தப் புத்தகத்தைப் பிரசுரித்ததாலேயே அதிலுள்ள கருத்துக்கள் அனைத்தையும் மகாராஷ்டிர அரசு ஏற்றுக் கொண்டதாகாது என்ற குறிப்பையும் பார்வையான விதத்தில் ஆரம்பத்திலேயே பிரசுரிப்பது என்றும் முடிவு செய்திருக்கிறது. இது சிவசேனையைத் திருப்திப்படுத்துமா, அமைதி காக்குமா என்பது ஒருபுறமிருக்க, இந்தப் பிரச்சினையில்லா விட்டால் வேறு ஒரு பிரச்சினையில் சீக்கிரமே இருதரப்பினரும் மறுபடியும் மோதிக் கொள்வார்கள் என்றும் கருதப்படுகிறது. ஆக மொத்தம் முதலமைச்சர் சவானின் அரசாங்கம் இப்போது இருதலைக் கொள்ளியாகத் தவிக்கிறது.

— ஜி. சந்திரசேகர்

புகைப்படம்: நன்றி: இந்தியன் எக்ஸ்பிரஸ்

# இன்றையச் சூழலில் தி.மு.க

## —கருணாநிதி சிறப்புப் பேட்டி

கேள்வி: தி. க. விலிருந்து தி. மு. க., தி. மு. க. விலிருந்து அ. தி. மு. க., இப்போது அ. தி. மு. க. விலேயே இரண்டு கோஷ்டிகள்! இந்தப் பிளவுகளுக்கு என்ன காரணம்? திராவிட இயக்கத்தின் பலவீனம் என்று சொல்லலாமா?

கலைஞர் மு. கருணாநிதி: தந்தை பெரியார் அவர்களின் பகுத்தறிவுக் கொள்கைகளை அரசியல் ரீதியாகவும் நடைமுறைப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில்தான் அறிஞர் அண்ணா அவர்கள் தி. மு. க. வை ஆரம்பித்தார். அது எப்படித் திராவிட இயக்கத்தின் பலவீனமாக முடியும்? அதன் பிறகு எம். ஜி. ஆர். பிரிந்ததென்பது அரசியல் ரீதியானது அல்ல; ஏனெனில் அவர் எந்தக் கொள்கை மாறுபாடுகளினாலும் பிரிந்து செல்லவில்லை. அவர் தி. மு. க. வின் மேல் சொல்லிய குற்றச்சாட்டுகள் கூடப் போலியானவை என்பதற்கு, அவர் 72 — இல் பிரிவதற்கு ஒரு மாதம் முன்பு மதுரையில் நடந்த தி. மு. க. மாநாட்டில் 'தி. மு. க. வின் மேல் எதிர்க்கட்சியினர் குற்றம் சாட்டுகிறார்களே...' என்றுமக்களைப்பார்த்துக்கேட்டார். மக்களெல்லாம் 'இல்லை... இல்லை...' என்று கூற, 'மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு' என்று எம். ஜி. ஆரே சொன்னார். அதன் பிறகு, டெல்லியிலிருந்து இந்திரா அம்மையார் தி. மு. க. வின் வளர்ச்சியைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் அதைப் பிளக்க எண்ணினார். அதற்கான கருவியாகத்தான் தெரிந்தோ தெரியாமலோ எம். ஜி. ஆர். பயன்பட்டு விட்டார். ஆக, அண்ணாவுக்குப் பிறகு நடந்த பிரிவுகள் என்பது தனி மனித பலவீனங்களே தவிர, திராவிட இயக்கத்தின் பலவீனம் அல்ல.

கேள்வி: இலங்கை ஒப்பந்தம் மற்றும் இந்திய அமைதிப் படையினரின் செயல்பாடுகள் ஆகியவற்றின் மீது தி. மு. க. தலைமை கொண்டுள்ள எதிரான கருத்துக்களோடு தி. மு. க. வின் அடிமட்டத் தொண்டர்கள் ஒத்துப் போகவில்லை என்று 'ஹிந்து' பத்திரிகை நடத்திய சர்வே ஒன்று சொல்லுகிறது. உள்கட்சி ஜனநாயகம் மிகுந்த தி.மு.க. வில் இலங்கைப் பிரச்னை தொடர்பாகத் தொண்டர்களின் கருத்துக்களைத் தலைமை கேட்டறியவில்லையா? ஏன் இந்த முரண்பாடு?

கலைஞர்: 'ஹிந்து' பத்திரிகை முதலில் பிரபாகரனை ஒரு பெரிய வீரனாக — மகாவீரனாகச் சித்திரித்துக் கொண்டிருந்த ஒரு பத்திரிகை. பிறகு என்ன காரணத்தாலோ திடீரென்று மாறி, பிரபாகரனுக்கு எதிரான பிரசாரத்தில் ஈடுபட வேண்டிய சூழ்நிலைக்கு ஆளாக்கப்பட்டிருக்கிற ஒரு பத்திரிகை. இதில் தி. மு. க. வில் எந்தவித முரண்பாடும் இல்லை. ஆரம்பத்தில், எம். ஜி. ஆர். கொடுத்த அழுத்தம் காரணமாகப் பிரபாகரன் தி. மு. க. வின் ஆதரவைப் பெறத் தயங்கினார். அந்தத் தயக்கத்தை விரும்பாத தி. மு. க. வின் அடிமட்டத் தொண்டர்களும் சிறிது தயக்கம் காட்டியது உண்மையே. பிறகு — அவர்களிடம் எடுத்துச் சொல்லப்பட்ட பிறகு, எல்லோரும் முழுமூச்சாகத் தலைமையின் முடிவுக்குக் கட்டுப்பட்டு நடந்தார்கள். அதன் உதாரணங்களே பல்வேறு மாவட்டங்களில் நடந்த பேரணிகள்.

கேள்வி: நீங்கள் தனித் தமிழ் ஈழத்தை ஆதரிப்பதால்வரப்போகும்தேர்தல்பிரசாரத்தில் உங்களைப் பிரிவினைவாதி என்றும் — தி. மு. க.வைப் பிரிவினைக் கட்சி என்றும் இ. காங்கிரஸார் பிரசாரம் செய்து உங்களைப் பலவீனப்படுத்துவார்களே?

கலைஞர்: நாங்கள் அண்ணா காலத்திலேயே பிரிவினை எண்ணத்தை விட்டு விட்டோம். அதனால் தி. மு. க. பிரிவினைக் கட்சி அல்ல. நாங்கள் இலங்கையில் தனித்தமிழ் ஈழம் கேட்பது இந்தியாவில் தனித்தமிழ்நாடு கேட்பதாகப் பொருள் அல்ல. இன்னும்சொல்லப்போனால், பாகிஸ்தானில் பங்களாதேஷை உருவாக்க இந்திரா காந்திமுயற்சிமேற்கொண்டார். அதேபோல், தென்னாப்பிரிக்க விடுதலை இயக்கத்தை இந்தியா ஆதரிக்கிறது என்றால், இங்குள்ள இந்திரா காங்கிரஸ் இந்தியாவில் ஒரு பிரிவினையை ஆதரிப்பதாக அர்த்தம் அல்ல; பாலஸ்தீனிய விடுதலை இயக்கத்தை இந்தியா ஆதரிப்பதாலேயே இங்கும் ஒரு பிரிவினை இயக்கத்தை இ. காங்கிரஸார் ஆதரிப்பதாக அர்த்தம் அல்ல. அதையெல்லாம் ஆதரித்



...கடந்த காலத்தில் இ.காங்கிரஸோடு நாங்கள் கொண்ட கசப்பான அனுபவங்கள், மீண்டும் அவர்களோடு உறவு கொள்வதற்கான சூழ்நிலையை உருவாக்காது.



தாலும் எப்படி இ. காங்கிரஸ் இந்திய ஒருமைப்பாட்டுக்கு உழைக்கிற கட்சி — பாடுபடுகிற கட்சி என்று உரிமை கொண்டாடிக் கொள்கிறதோ அதேபோல்தான் நாங்களும் இலங்கையில் தனித்தமிழ் ஈழம் அடைய வேண்டுமென்று சொன்னாலும் இந்தியாவின் ஒருமைப்பாடு நிலைக்க வேண்டும் என்று உண்மையாக — திடமாகக் கருதுகிறோம்.

கேள்வி: எந்தவொரு பிரச்னை வரும் போதும் தனது கருத்தை உடனடியாகத் தெரிவிக்கிற தி. மு. க., வன்னியர் போராட்டம் பற்றி ஏதும் கருத்துத் தெரிவிக்கவில்லையே?

கலைஞர்: ஏன் தெரிவிக்கவில்லை! வன்னிய சங்கத்தினரை அரசு அழைத்துப் பேசாமல் வன்முறை நிகழும் அளவுக்கு முற்ற விட்டது தவறு என்று அடுத்த நாளே சொல்லி விருக்கிறோம்.

கேள்வி: ஜாதி அடிப்படையிலான இட ஒதுக்கீடு தேவைதானா என்பது பற்றிய கருத்தைச் சொல்லுகிறேன்...

கலைஞர்: ஜாதி அடிப்படையிலான இட ஒதுக்கீடு கர்நாடகத்திலும் கேரளத்திலும் இருப்பதாக வன்னியர் சங்கத்தினர் சுட்டிக் காட்டுகிறார்கள். அப்படி இருக்கிறதா இல்லையா என்கிற ஆராய்ச்சியையாவது அரசு மேற்கொண்டு அவர்களுக்கு ஒரு முடிவைத் தெரிவிக்க வேண்டுமல்லவா? அதைத்தான் நாங்கள் அவர்களை அழைத்துப் பேசியிருக்க வேண்டுமென்று சொன்னோம். நாங்கள் ஒருபோதும் மௌனம் சாதிக்கவில்லை.

கேள்வி: இதுவரையில் நீங்கள் ஜெயலலிதா பற்றி எதுவுமே பேசியதில்லை. இந்த விஷயத்தில் நீங்கள் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கிறீர்கள். [illegible]ங்கு ஏதேனும்

விசேஷ காரணங்கள் இருக்கின்றனவா?

கலைஞர்: தந்தை பெரியார், அறிஞர் அண்ணா போன்ற மாபெரும் தலைவர்களிடம் வளர்ந்தவன். காயிதே மில்லத் போன்றவர்களுடன் பழகியவன். பெருந்தலைவர் காமராஜர், மூதறிஞர் ராஜாஜி போன்ற தலைவர்களைச் சந்தித்தவன்; பழகியவன். சில நேரங்களில் அவர்களோடு கருத்து மாறுபாடு கொண்டுபேசியிருக்கிறேன். இன்னும்சொல்லப் போனால் பண்டித ஜவாஹர்லால் நேருவின் கருத்துக்களில் கூட மாறுபாடு கொண்டு எதிர்த்திருப்பவன். இந்திரா காந்தி அம்மையாரோடும் கருத்து மாறுபாடு கொண்டு பேசியிருப்பவன். அதில் எல்லாம் பெருமை கண்ட என்னை இதற்கெல்லாம் ஏன் இழுக்கிறீர்கள்!

கேள்வி: நீங்கள் இப்படிச் சொன்னாலும் கூட ஜெயலலிதா என்பவர் இன்றைக்குத் தவிர்க்க முடியாத எதிர்ப்புச் சக்தியாக இருக்கிறார். அதுவும் அவருடைய அணியோடு இ.காங்கிரஸ் கூட்டுஎன்பதும்உறுதிபோன்றதோர் நிலையில் நீங்களும் அவரைத் தவிர்க்க முடியாதே?

கலைஞர்: யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வதைப் போலத் தமிழ்நாட்டு மக்களும் செய்வார்களேயானால் அது... (வாய் விட்டுச் சிரிக்கிறார்) அவர்கள் கண்ட வழி என்று எண்ணிக் கொண்டு போவதைத் தவிர, எனக்கு வேறு வழி தோன்றவில்லை!

கேள்வி: தி. மு. க. — இ. காங்கிரஸ் கூட்டு என்பது கிடையாது என்று நீங்கள் திட்டவட்டமாகச் சொல்லியிருந்தாலும் கூட 'அரசியலில் நிரந்தரப் பகையும் இல்லை; நட்பும் இல்லை' என்று சொல்லிக் கூட்டுச் சேர வாய்ப்பு உண்டு; இல்லையா?

கலைஞர்: அரசியலில் பகையில்லை என்பதற்கு, மேடைகளில் ஆயிரம் கருத்து மாறுபாடுகளைப் பேசினாலும் தனிப்பட்ட முறையில் பகையில்லை என்பதுதான் பொருள். அதற்காக எங்கள் கொள்கைகளையெல்லாம் மூட்டை கட்டி வைத்து விட்டு, இன்னொருவரோடு உடன்பாடு கொள்வதென்பது முடியாது. அதோடு கடந்த காலத்தில் இ. காங்கிரஸோடு நாங்கள் கொண்ட உறவில் ஏற்பட்ட கசப்பான அனுபவங்கள் மீண்டும் அவர்களோடு உறவு கொள்வதற்கான சூழ்நிலையை உருவாக்காது என்பது தான் எனது திட்டவட்டமான கருத்து.

கேள்வி: இ.காங்கிரஸாரே வந்து உங்களோடு கூட்டுச் சேர முயன்றாலும் உங்களின் இந்த முடிவில் மாற்றம் ஏதும் ஏற்படாதா?

கலைஞர்: நாங்கள் எமர்ஜென்ஸியை எதிர்த்தோம். அதனால் ஏற்பட்ட கோபம் காரணமாக 76—ல் எங்கள் ஆட்சியை இந்திரா அம்மையார் கலைத்தார். ஆனபோதிலும் இந்திரா அம்மையார் ஓர் அனாதையாகி விட்ட சூழ்நிலையில் அவரை ஆதரித்தோம். அது சந்தர்ப்பவாத அரசியல் அல்ல; கொள்கை அடிப்படையில்தான் ஆதரித்தோம். எப்படி ஜனநாயகத்திற்காக எமர்ஜென்ஸியை எதிர்த்தோமோ, அப்படி ஜனதாவால் ஒரு நிலையான ஆட்சியைக் கொடுக்க முடியாமல் போன சூழ்நிலையில் இந்தியாவில் ஒரு நிலையான ஆட்சி ஏற்பட வேண்டுமென்பதற்காக இந்திரா அம்மையாரை ஆதரித்தோம்; அதுவும் எமர்ஜென்ஸிக்காக அவர் வெளிப்படையாக மன்னிப்புக் கேட்டுக் கொண்ட பிறகுதான் ஆதரித்தோம். அப்போது பாராளுமன்றத் தேர்தலில் எம். ஜி. ஆரைத் தோற்கடித்துப் பெருவாரியான வெற்றியைத் தி.மு.க. — இ.காங்கிரஸ் கூட்டணி பெற்றாலும் கூட, சட்டமன்றத் தேர்தலில் இங்குள்ள இ.காங்கிரஸார் ஒருவருக்கொருவர் குழிதோண்டிக் கொண்டது மாத்திரமல்லாமல், தி.மு.க. வினரையும் பல இடங்களில் தோற்கடிப்பதற்கு அவர்கள் மறைமுகமாகச் சதி செய்தனர். இவற்றையெல்லாம் பார்த்த பிறகு அவர்களோடு இனி உறவு கொள்வது சரியல்ல என்ற முடிவுக்கு வந்து விட்டோம்.

கேள்வி: ஜானகி அணியினர் இ.காங்கிரஸ் ஆதரவை நம்பி ஏமாந்தது பற்றி நீங்கள் குறிப்பிடுகையில் பாம்பின் நிழலில் தவளை இளைப்பாறி ஏமாந்து போனதாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அதைப் பார்க்கும்போது, இ.காங்கிரஸ் ஆதரவு என்பது பாம்பின் நிழல் போன்றதேயென்று ஆரம்பத்திலேயே ஜானகி அணியினர் தெரிந்து கொண்டு அவர்களை நம்பாமல் தி.மு.க. வின் ஆதரவைக் கோரியிருந்தால் கொடுத்திருப்பீர்களோ என்றுதான் தோன்றுகிறது!

கலைஞர்: அது நடந்த ஒரு நிகழ்ச்சியைப் பற்றிச் சொன்ன கருத்தே தவிர, வேறில்லை.

கேள்வி: தி. மு. க. உறுப்பினர்களுடன் ஜானகி அணியினர் ஒரு ரகசிய உடன்பாடு செய்து கொண்டிருந்ததாகப் பூட்டா சிங் கூறியிருக்கிறாரே?

கலைஞர்: அது தவறு. சட்டமன்றத்தைப் பத்து மணியிலிருந்து பன்னிரண்டு மணிக்கு ஒத்தி வைத்த பிறகுதான் — இ.காங்கிரஸின் ஆதரவு இல்லையென்று வெளிப்படையாகத் தெரிந்த பிறகுதான் என்னைச் சந்திப்பதற்கு மாதவன், ராகவானந்தம், ராஜாராம், ஆலடி அருணா போன்றவர்கள் வந்தார்கள். இதற்கிடையில் 'ஜானகி அம்மையார் அணியினருக்குத் தி.மு.க. வின் ஆதரவு கிடைத்து விட்டது' என்று சட்டமன்றத்தில் ஒரு தவறான பிரசாரம் செய்யப்பட்டது. அது பற்றி நாஞ்சில் மனோகரன் சட்டமன்றத்திலிருந்து தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு கேட்டார். 'நாம் முன்பு எடுத்த முடிவில் எந்தவிதமான மாற்றமும் இல்லை' என்று சொன்னேன், கடிதமும் அனுப்பினேன். இது தான் நடந்தது.

கேள்வி: ஜானகி அணியினர் வந்து உங்களிடம் பேசியது என்ன? சில பத்திரிகைகளில் 'நீங்கள் ஆதரிக்காவிட்டால் இ.காங்கிரஸ் ஆட்சி வந்துவிடும்' என்று அவர்கள்

கேட்டதாகவும் அதற்கு நீங்கள் 'ஏற்கெனவே அதுதானே நடந்து கொண்டிருக்கிறது' என்று சொன்னதாகவும் செய்தி வந்ததே?

கலைஞர்: அது விவாதம் செய்யப்பட்ட போது பேசப்பட்ட விஷயம். அவர்கள் கேட்டதென்பது, 'நீங்கள் ஆதரவு கொடுக்க வேண்டும். இல்லையேல் நடுநிலையாவது வகிக்க வேண்டும். சட்ட சபைக்கு வராமல் இருந்து விட வேண்டும்' என்பதுதான்.

கேள்வி: ஒருவேளை வரப்போகிற தேர்தலில் இ.காங்கிரஸை ஒரு பொது எதிரியாகக் கருதித் தோற்கடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் — ஜானகி அணியினரும் உங்களிடம் வந்து அதற்கு ஆதரவு கேட்டால் அப்போது அவர்களோடு தேர்தல் உடன்பாடு வைத்துக் கொள்வீர்களா?

கலைஞர்: அப்படி அவர்கள் உறுதியாக இருக்கிறார்களா என்று உண்மையை அறிந்து பிறகு அது பற்றிச் செயற்குழுவும் பொதுக் குழுவும் கூடி முடிவு செய்யும்.

கேள்வி: ஜெயலலிதா அணியினரும் உங்களிடம் வந்து ஆதரவு கேட்டதாகவும் — இல்லையில்லை, சட்டசபையில் நடந்த நிகழ்ச்சிகள் பற்றிக் கவர்னரிடம் விளக்கிச் சொல்லச் சென்றபோது தி.மு.க. உறுப்பினர்கள் ஏன் வரவில்லை என்றுதான் அவர்கள் கேட்டதாகவும் இரண்டு விதமான செய்திகள் வந்தனவே, எது உண்மை?

கலைஞர்: நாஞ்சிலாரைப் பண்ருட்டி ராமச்சந்திரன் சட்டசபையில் சந்தித்து அவர்கள் சார்பாக இருந்து வாக்களிக்க வேண்டுமென்று ஆதரவு கேட்டிருக்கிறார்.






கலைஞர்: ஜானகி அம்மையார் அணியாக இருந்தாலும் சரி, அல்லது மற்றொரு அணியாக இருந்தாலும் சரி, இரண்டு அணியில் உள்ளவர்களுமே 'ஒன்றாக இருந்தபோதுதான் இலங்கைப் பிரச்னையில் இராணுவ நடவடிக்கை சரியானதென்று பேசினார்கள். ஓரிருவர் எதிர்த்துப் பேசிய போது கூட அது அவர்களின் தனிப்பட்ட கருத்து என்று அவர்கள் தலைவர் எம்.ஜி.ஆர். கூறினார். அதேபோல், மொழிப் பிரச்னையில் அறிஞர் அண்ணா அவர்கள் எந்த அறப்போர் முறையைக் கையாண்டாரோ அதே முறையில்தான் நாங்கள் அரசியல் சட்டப் பகுதியை ஒரு தனித் தாளில் எழுதிக் கொளுத்தினோம். அப்படியிருந்தும் அதற்காகப் பத்துச் சட்டமன்ற உறுப்பினர்களைப் பதவி நீக்கம் செய்தார்கள். ஆக, மொழிப் பிரச்னையிலும் அவர்கள் உறுதியானவர்கள் அல்ல என்பது கடந்த ஆண்டில் உறுதிப்பட்டு விட்டது. எனவே கூட்டு எப்படி சாத்தியமாகும்?

கேள்வி: இனிமேல் உறுதியாக இருந்தால் என்ன செய்வீர்கள்?

அவர் ஏற்கெனவே கழகம் எடுத்த முடிவைச் சொல்லியிருக்கிறார். இங்கே, எனக்கு அரங்கநாயகம் போன் செய்திருக்கிறார். அப்போது நான் இல்லை. பிறகு கோவை செழியன், முன்னாள் அமைச்சர் சௌந்தரராஜன் ஆகியோர் என்னோடு டெலிபோனில் பேசினார்கள். 'சட்ட சபையில் நடந்த நிகழ்ச்சிகளைக் கவர்னரிடம் சொல்ல எங்களோடு நாஞ்சிலாரை அனுப்பி வையுங்கள்' என்றனர். அதற்கு நான், 'அது பற்றி நாங்கள் தனியாகவே சென்று சொல்லிக் கொள்வோம். உங்களோடும் காங்கிரஸ்காரர்களோடும் வந்து சொல்ல வேண்டிய அவசியம் இல்லை' என்று சொல்லி விட்டேன். இதுதான் நடந்தது. இப்படி இரண்டு அணியினரும் எங்களிடம் கேட்டதில் தவறேதும் இல்லை. முடிவெடுக்க வேண்டியது நாங்கள் தானே! இந்நிலையில் இவர்கள் வந்து கேட்டதென்பது ஏதோ தீண்டத்தகாத பாவிகளிடம் வந்து கேட்டதுபோல் பெரிதுபடுத்தப் படுவதுதான் ஆச்சரியமாக இருக்கிறது!

கேள்வி: தி.மு.க. — அ.தி.மு.க. என்பது

ஒன்றுக்கொன்று இதுவரை அப்படிப்பட்ட எதிர்ப்பாளர்களாகத்தானே இருந்தன!

கலைஞர்: (சிரிக்கிறார்)

கேள்வி: சட்டசபையைக் காலை பத்து மணியிலிருந்து பன்னிரண்டு மணிக்கும், பிறகு மூன்று மணிக்குமாகச் சபாநாயகர் ஒத்தி வைத்துக் கொண்டே சென்றது ஜானகி அணியினருக்கு அவகாசம் கொடுத்ததாகாதா? காலை பத்து மணிக்கே நம்பிக்கை வாக்குக் கோரும் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்க வேண்டாமா? அப்படிச் செய்திருந்தால் கலாட்டாக்களுக்கே வாய்ப்பில்லையே?

கலைஞர்: காலை பத்து மணிக்குச் சபாநாயகர் வந்ததும் இ.காங்கிரஸ் உறுப்பினர்கள் ஐவர் தாங்கள் ராஜினாமாச் செய்வதாகத் தமக்குப் போன் செய்தார்களென்று சொன்னார். அதை இ.காங்கிரஸ் உறுப்பினர்கள் மறுத்தார்கள். அதனால் ஒத்திவைத்தார். சபாநாயகர் சொன்னது இன்று உண்மையாகத்தானே ஆயிற்று! மறுபடியும் பன்னிரண்டு மணிக்குச் சபையைக் கூட்டினார். ஆறு முன்னாள் அமைச்சர்களை விலக்கினார். அதுவும் புதிய விஷயமில்லையே! முன்பு பத்து தி.மு.க. உறுப்பினர்களை விலக்கிய போது இப்போது இவர்களுக்கிருக்கும் ஜனநாயக உணர்வு அப்போது எங்கே போனது? இதற்கிடையில் இ.காங்கிரஸாரும் அ.தி.மு.க. வின் மற்ற அணியினரும் சேர்ந்து சிவராமன் என்பவரைச் சபாநாயகராகத் தேர்ந்தெடுத்து, ஜானகி அம்மையாரின் மேல் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறியதாகச் சொன்னார்கள். பிறகு சிவராமன் சட்டசபை காலவரையின்றி ஒத்தி வைக்கப்பட்டதாக அறிவித்தார். அவர்கள் தேர்ந்தெடுத்தவர்தான் உண்மையான சபாநாயகர் என்றால் பிறகு எதற்காக மறுபடியும் மூன்று மணிக்கு வந்தார்கள்? காலவரையின்றிச் சட்டசபையை ஒத்தி வைத்தால் மறுபடியும் கவர்னரும், சபாநாயகரும் சேர்ந்து தானே சட்டசபையைக் கூட்ட முடியும்! பிறகு எதற்கு வந்தார்கள்? ஆக, என்னுடைய அழுத்தமான கருத்து, சபாநாயகர் நீதிமான் என்பதல்ல; ஏனெனில் கடந்த காலத்தில் நாங்களே அவரால் பல முறை பாதிக்கப்பட்டிருக்கிறோம். வானளாவிய அதிகாரங்கள் தமக்கு இருப்பதாக அவர் சொன்னதும் ஏற்றுக் கொள்ள முடியாத விஷயங்கள். ஆனால் அன்றைய தினத்தைப் பொறுத்த வரையில் இவ்வளவு கலாட்டாக்களுக்கும் காரணம் இ.காங்கிரஸார்தான் என்பது என்னுடைய அழுத்தம் திருத்தமான கருத்து. இதில் எந்தவிதமான மாற்றமும் கிடையாது.

கேள்வி: அனைவருமே கவர்னர் குரானாவைப் பற்றிக் குறைதான் சொல்கிறார்கள். இந்தச் சூழ்நிலையில் கவர்னர் நடந்து கொண்ட விதம் பற்றி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

கலைஞர்: கடந்த பொதுத் தேர்தலுக்குப் பிறகு, வாய் திறந்து பேச முடியாத ஒருவருக்கு முதலமைச்சராகப் பதவிப் பிரமாணம் செய்து வைத்து 'முதலமைச்சர் நன்றாகப் பேசுகிறார்!' என்று ஒரு பெரும் பொய்யைச் சொன்னாரே அப்போதிலிருந்தே கவர்னர் குரானாவை நான் குறை சொல்லிக் கொண்டிருக்கிறேன். இப்போது நியாயம் பேசுபவர்களெல்லாம் அப்போது எங்கே போனார்கள்? கவர்னர் குரானா தொடர்ந்து தவறு செய்து கொண்டே இருக்கிறார்; அந்தத் தவறுகளின் தொடர்ச்சிதான் இது. எனவே, இது எனக்குப் பெரிதாகத் தோன்றவில்லை! நிச்சயமாக சிங்கிள் மெஜாரிட்டி

## கையடக்கமான ஒரு மொழிபெயர்ப்பாளர்



கையடக்கமான ஒரு சின்ன, கறுப்புப் பெட்டி — அதில் ஒரு விசையைத் தட்டிவிட்டு ஆங்கிலத்தில் ஒரு வாக்கியம் பேசினால், நாம் பேசியதை அப்படியே, 'ஜெர்மன் மொழியில் மொழிபெயர்த்து, மறுகணம் ஒலி வடிவில் வழங்குகிறது! இக்கருவியில் வெவ்வேறு 'கார்ட்ரிட்ஜ்'களைப் பொருத்தி இத்தாலியன், ஜெர்மன், பிரெஞ்சு, ஸ்பானிஷ் என்று நான்கு மொழிகளில் மொழிபெயர்க்கச் செய்யலாம். ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்பவருக்கு ஆங்கில மொழி அறிவு இருந்தால் போதாது. அந்நாட்டவர்களுக்குப் பொதுவாகத் தாய்மொழி மட்டுமே தெரிந்திருக்கும். எனவே, 'வாய்ஸ்' என்ற இக்கருவியைக் கொண்டு தமது ஆங்கிலக் கேள்விகளை மொழிபெயர்க்கச் செய்யலாம். ஆனால் ஜெர்மானியரோ பிரெஞ்சுக்காரரோ தமது தாய்மொழியில் பேசினால், அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் ஆற்றல் இக்கருவிக்குக் கிடையாது. எனவே, சைகைகள் மூலம்தான் பதில்களைப் பெற வேண்டும். இருவழி மொழிபெயர்ப்புச் செய்யக் கூடிய ஒரு கருவியை உருவாக்கும் முயற்சியிலும் தற்போது ஈடுபட்டுள்ளது, 'வாய்ஸ்'-ஐத் தயாரித்துள்ள அமெரிக்க நிறுவனம்.

நன்றி: நியூஸ்வீக்.

# எங்க தாத்தா ! இன்னமும் துடிப்பாயிருக்காரு!

தாத்தாவுக்கு வயதாகிக் கொண்டே போகிறது. உடம்போட செயலாற்றல் குறைந்து கொண்டே வருகிறது. அவர் இப்போது குறைவாகச் சாப்பிடுகிறார்.

**அவர் தனது ஊட்டச்சத்துக்களை காம்ப்ளான் மூலம் நிறைவு செய்கிறார்.**

எளிதாக ஜீரணிக்கக் கூடிய காம்ப்ளான், உங்கள் உடலுக்குத் தேவையான 23 ஊட்டச்சத்துணவுகளைக் கொண்டதாகும். தேய்ந்த உடல் திசுக்களைப் புதுப்பிப்பதற்கான பால் புரதம், சக்தி பெறுவதற்கான கார்போ-ஹைட்ரேட்டுகள் மற்றும் கொழுப்புச்சத்து. உடல் நலத்திற்கான வைட்டமின் மற்றும் தாதுக்கள் ஆகியவற்றை கொண்டதாகும் காம்ப்ளான்.




**23**

மூலாதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை.

**காம்ப்ளான்®**

திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/39/213/TML

யைக் கவர்னர் மதிக்க வேண்டும். ஆனால், தமக்கு 97 பேர் ஆதரவாக இருக்கிறார்கள் என்று ஜானகி அம்மையார் சொல்லும் போது, மேலும் 'உங்களை எந்தெந்த கட்சிகள் சட்டமன்றத்தில் ஆதரிக்க இருக்கின்றன? அந்த ஆதரவுக் கடிதங்களைப் பெற்றுத் தாருங்கள்' என்று அவர் ஜானகி அம்மையாரைக் கேட்டிருக்க வேண்டும். அதையெல்லாம் கேட்காமல் மூன்று வார காலம் அவகாசம் கொடுத்தது சரி என்று நான் வாதிக்க மாட்டேன்.

கேள்வி: வரப்போகிற தேர்தல் கடந்த தேர்தல்களைப் போல் இல்லாத ஒரு வித்தியாசமான தேர்தல்! இந்நிலையில் தி.மு.க. வின் பிரசார அணுகுமுறை எப்படி இருக்கும்?

கலைஞர்: கடந்த பத்தாண்டு காலத்தில் நடந்த தவறுகளையெல்லாம் சுட்டிக் காட்டுவோம். நல்ல நிர்வாகம் — விரைவான நிர்வாகம் — சிக்கனமான நிர்வாகம் அளிக்கப்படும் என்பதை எடுத்துச் சொல்லுவோம். தொழில்துறைத் திட்டங்களிலும் வேலை வாய்ப்புத் திட்டங்களிலும் ஏற்பட்டிருக்கும் தொய்வு அகற்றப்படும் என்கிற உறுதியை மக்களுக்கு வழங்குவோம். இன்னும் எங்களது பிரசாரத் திட்டங்களைக் கட்சியில் கலந்து பேசி, முறைப்படுத்தி முடிவெடுப்போம்.

கேள்வி: இப்போது அ.தி.மு.க. இரண்டு கோஷ்டிகளாகப் பிளவுபட்டுக் கிடக்கிற சூழ்நிலையில் வெற்றி வாய்ப்பு தி.மு.க. வுக்கே அதிகம் என்று கொண்டாலும், தனிப் பெரும்பான்மை பெற்று ஒரு நிலையான ஆட்சியை அமைக்க முடியுமா? திரிபுரா, மேகாலயா மாதிரி கழுத்தைப் பிடிக்கிற மாதிரியான மெஜாரிட்டிதான் கிடைக்குமா?

கலைஞர்: நிலையான அரசு ஏற்படுமென்று நான் நம்புகிறேன். அது தமிழ்நாட்டு மக்களைப் பொறுத்திருக்கிறது!

கேள்வி: முன்பு தி.மு.க. வின் மேல் ஊழல்புகார் சொல்லப்பட்டபோது ஏற்பட்ட பரபரப்பு இப்போது இல்லையே! மத்தியிலுள்ள ராஜீவ் அரசு மேலும் சரி, இங்குள்ள இரண்டு அ.தி.மு.க. கோஷ்டிகள் மேலும் சரி — இவர்களே ஒருவருக்கொருவர் — கோடிக்கணக்கான ரூபாய் ஊழல்களைப் பற்றித்தான் பேசிக் கொள்கிறார்கள். இருந்தும் மக்களிடையே ஒரு பரபரப்பு இல்லையே? இதற்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?

கலைஞர்: முன்பு சட்டையில் கொஞ்சம் தண்ணீர் பட்டபோது, அடடே ஈரமாகி விட்டதே என்று கவலைப்பட்டோம். இப்போது கடலே பொங்கி ஆளையே மூழ்கடிக்கும் நிலையில் ஈரம் எப்படித் தெரியும்?

கேள்வி: இப்போது யார் என்ன சொன்னாலும், யாராலும் ஊழலே இல்லாத ஆட்சியைத் தர முடியும் என்று மக்கள் நம்புவதற்குத் தயாராய் இல்லை...






கலைஞர்: எந்த ஆட்சியிலும் சில தவறுகள் நடைபெறவே செய்யும். தி.மு.க. ஆட்சியில் தவறுகளே நடைபெறவில்லை என்று நான் சொல்ல மாட்டேன். ஆனால் குற்றச்சாட்டுகளை எப்படியெல்லாம் சுமத்தினார்கள் என்பதுதான் ஆச்சரியம்! இப்போது நீங்கள் இங்கே அமர்ந்திருக்கும் வீடு நான் சினிமாவுக்குக் கதை வசனம் எழுதிய காலத்தில் — 56—லேயே வாங்கப்பட்டது. எனினும் இது நான் முதலமைச்சரான பிறகு வாங்கப்பட்டதாகச் சொன்னார்கள்! எம்.ஜி.ஆர். கொடுத்த ஐம்பத்தாறு குற்றச்சாட்டுகளிலும் சம்பந்தப்பட்ட தொகையே ஐம்பது லட்ச ரூபாய்தான். அதிலும் நாற்பது லட்ச ரூபாய் வீராணம் திட்டத்தில் நாங்கள் லஞ்சம் வாங்கியதாகச் சொல்லப்பட்டது. அதைச் சர்க்காரியா கமிஷன் விசாரணை செய்த போது — அந்த விசாரணையை நாங்கள் புறக்கணித்தாலும் கூட — மக்கள் நல உரிமைக் கழகத்தினர் வாதிட்டார்கள். முடிவில் அக்குற்றச்சாட்டு நிரூபிக்கப்படவில்லையென்று சர்க்காரியாவே கூறிவிட்டார். அவ்வப்போது எதிர்க் கட்சியினரும் பத்திரிகைகளும் சுட்டிக் காட்டிய புகார்களின் பேரில் நான் நடவடிக்கை எடுத்திருக்கிறேன். உதாரணமாக சென்னை மாநகராட்சி பற்றிய புகாரை டாக்டர் ஹண்டே சட்டசபையில் சொன்ன போது, அதில் பூர்வாங்க ஆதாரமிருப்பதாகத் தெரிந்ததும் அப்போதே மாநகராட்சியைக் கலைக்க உத்தரவிடுவதாக அறிவித்தேன். அதில் எனது நெருங்கிய நண்பர்கள் கூடக் கைது செய்யப்பட்டார்கள். இப்

போது நாங்கள் எதிர்க்கட்சியான பிறகு அந்த வழக்கு பற்றிக் குறிப்பிட்ட நரசிம்மன், லட்சுமி நாராயணன் போன்ற ஐ.பி.எஸ். அதிகாரிகள் அந்த வழக்கில் முதல்வர் (கருணாநிதி) எந்தவிதத் தலையீடும் செய்ய வில்லை என்றே குறிப்பிட்டிருக்கிறார்கள். தஞ்சாவூரில் என் ஆருயிர் நண்பரான வழக்கறிஞர் ஒருவர் ஒரு பாங்கின் தலைவராக இருந்த போது, அவர் மேல் ஒரு லட்ச ரூபாய் அளவுக்கு ஊழல் புகார் சொல்லப்பட்ட போதும் உடனடியாக விசாரிக்கப்பட்டு — வழக்குத் தொடரப்பட்டு அவருக்குத் தண்டனை வழங்கப்பட்டது. நிலமற்ற ஏழை விவசாயிகளுக்கு நிலம் கொடுக்கும் அடிப்படையில் எனது நெருங்கிய உறவினர் ஒருவருக்கு செங்கல்பட்டு மாவட்டத்தில் தவறான முறையில் நிலம் வழங்கப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டதும் அந்த அதிகாரி மீதும் நடவடிக்கை எடுத்து நிலத்தைத் திரும்பப் பெற்றோம். தி.மு.க. ஆட்சியில் தவறுகள் சுட்டிக்காட்டப்பட்டபோதெல்லாம் உடனடியாக நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கின்றன என்பதற்கு இவை உதாரணங்கள். எப்போதும் தவறுகளைக் களையத் தி.மு.க. தயங்கியதே இல்லை.

*கேள்வி:* இப்போது, மத்திய — மாநில உறவுகள் பற்றிச் சர்க்காரியா கமிஷன் கொடுத்துள்ள அறிக்கை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

*கலைஞர்:* மாநில அதிகாரங்களை நாம் கேட்கிற அளவுக்குத் தருகிற அறிக்கையாக அது அமையவில்லை என்பதே எனது கருத்து. மத்திய — மாநில உறவுகள் பற்றி இந்திய அளவிலான ஒரு பொது விவாதம் தேவை என்கிறோம்.

*கேள்வி:* நீங்கள் ராமாவரம் தோட்டத்திற்குச் சென்று காத்திருந்தும் எம்.ஜி.ஆருடைய உடலைப் பார்க்க முடியவில்லை என்று பத்திரிகைகளில் செய்திகள் வெளிவந்தன. அது பற்றி நீங்கள் ஏதும் குறிப்பிடாதது உங்களுடைய பெருந்தன்மைதான் என்றாலும், நாற்பதாண்டுகளுக்கு மேலாக எம்.ஜி.ஆருடன் பழகியவர் என்ற முறையில் அந்நிகழ்ச்சி உங்களுக்குள் ஒரு வருத்தத்தைத் தரவில்லையா?

*கலைஞர்:* நான் பார்க்க முடியாமல் போனதாகச் செய்தி வந்தது தவறு. உடலுக்கு டிரெஸ் பண்ணிக் கொண்டிருந்ததால் நான் அந்த அறைக்கு வெளியே ஐம்பது நிமிடங்கள் காத்திருந்தேன். பிறகு மாதவன், ஹண்டே, பாவலர் முத்துசாமி ஆகியோர் என்னை அழைத்துச் சென்று காண்பித்தார்கள்.

பேட்டி: **இளங்கோவன்**

அட்டை வண்ணப்படம்: **யோகா**

படங்கள்: **கே. வி. ஆனந்த்**

---



"வேலை தேடித் தேடி அலுத்துப் போயிருந்த எனக்கு இப்பத்தான் ஒரு வழியா..."

"வேலை கிடைச்சுதாக்கும்!"

"ஊஹூம்... ரிடையராகிற வயசாயிடுச்சு!"

— கொசவம்பட்டி அசோகு.

"என்ன சார் இது, இந்த ஆபீஸில் ஆங்காங்கே கடன் கிடையாதுன்னு போர்டு வெச்சிருக்காங்க!"

"அதுவா, ரொம்பப் பேர் லஞ்சத்துக்குக் கடன் சொல்லிடறாங்கன்னு இந்த ஏற்பாடு!"

— கீழை. அ. கதிர்வேல்.





# சத்யா

அவ்வளவு பெரிய கறுகறுப்பான தெருவில் வீடுகளுக்கு இடையில் கடைகளுக்கு இடையில் மிக உண்மையாக எடுக்கப்பட்டிருக்கும் அந்த முதல் இரண்டு சண்டைக் காட்சிகளையும் எடுக்க, வியர்வை என்ன, ரத்தமே சிந்த வேண்டியிருக்குமே! அந்தக் காட்சிகளுக்காக எல்லோரும் ஜோராக ஒரு முறை கைதட்டலாம்.

உதடுகளுக்கு மேலே மஸ்லின் போன்ற மென்மையான துணி உதடுகளுக்குக் காப்பாய் நிற்க, அந்த உதடுகளின் மேல் இடப்படும் விரசமற்ற முத்தம்; இரண்டு கைகளின் இயல்பான, இணைந்து பிரிந்து இணையும் இளைப்பு, பல்லவன் பஸ், அத்தனை பேரை வழிய வழியச் சுமந்து செல்லுகையில் அந்தக் கூட்டம் பற்றிக் கொஞ்சம் கூடக் கவலையேயில்லாமல் ஃபுட்போர்டில் வளரும் அந்தக் காதல் — டைரக்டர் காதல் காட்சிகளைக் காட்டுகையில் வெண் புறாச் சிறகுகளால் நம் இதயங்களை வருடுகிறார். அந்தக் காட்சிகளுக்காக எல்லோரும் எழுந்து ஜோராக இரண்டு முறை கைதட்டலாம்.

கமல்ஹாஸன் தாடி, லேசாக முறுக்கி விடப்பட்ட மீசை, கொஞ்சமே கொஞ்சம் வளர்ந்த முடி என்று வித்தியாசமாக வருகை புரிந்திருக்கிறார். அவருடைய ஆவேசம், கோபம், தாபம், வெறி மற்றும் அவர் வெளிப்படுத்தும் இன்ன பிற முகபாவங்கள் அனைத்தும் ஏற்கெனவே பழகிப் போனது தான் எனினும் சலிப்பு ஏற்படவில்லை.

இறக்கை படபடக்கும் ஒரு தும்பி எதிர்ப்பட்டவுடன் பயம், படபடப்பு, வியப்பு, மகிழ்ச்சி என்று அத்தனை முகபாவங்களையும் ஒரு நொடிக்குள் சட்சட்டென்று மாற்றிக் காட்டுகிறாரே அந்த அழகான, ஸ்லிம்மான, மலையாள அமலா — அவர்தான் அசத்துகிறார்.

ஜனக்ராஜ்—ம்ஹூம்ஹூம். நாயுடு காரெக்டருக்குத் தாக்கத் பற்றுது.

பேட்டை ரவுடி ரங்கன் காரெக்டர் தூள். அந்த ஆசாமி யார்?

தண்டபாணியாக நடித்திருப்பவரும் அட்டகாசம். கழுத்தை அறுக்கப் போகிறார் என்று தெரிந்திருந்தும் 'எப்போ?' 'எப்போ?' என்று எதிர்பார்க்க வைத்து விடுகிறார்.

மூத்த தங்கை இந்திராவின் மாமியார் பணத்திற்காக அலைவதைக் காட்டியிருப்பது படு செயற்கை. வரதட்சணைக் கொடுமையை இன்னும் மெருகேற்றிச் சொல்லியிருக்கலாம்.

காமிரா good.

இளையராஜாவின் மியூஸிக்கில் 'வளையோசை கலகலவென' எடுபடுகிறது.

'நகரு, நகரு' பாட்டையும், டான்ஸையும் இரக்கமில்லாமல் வெட்டி எறிந்திருக்கலாம்.

'வேலையில்லாத இளைஞர்களே, மூட்டை தூக்கியோ, மாடு மேய்த்தோ, தொழில் — வியாபாரம் செய்தோ, மூளையை உபயோகித்தோ உழைத்து முன்னேறுங்கள்' என்று சொல்வதற்குப் பதிலாக, ஆளுக்கு ஒரு குண்டாந்தடியைக் கொடுத்து, 'அக்கிரமக்காரர்களை அடித்து நொறுக்குங்கள்' என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லுகிறாரே, டைரக்டர் —

அதற்கு என்ன செய்யலாம்?

எல்லோரும் எழுந்து ஒரு நிமிடம் மௌனமாக நிற்கலாம்.

— ஜெயமன்மதன்




அகோ, வாரும் பிள்ளாய், நிரந்தர நம்பர் டூ மந்திரியே! மதுவிலக்கை அமுலாக்க வேண்டும்! காவிரி நீருக்கு ஹெக்டேயுடன் பேச வேண்டும்! பாண்டியனுக்குக் கல்தா! போலீஸ் கொட்டத்தை அடக்க வேண்டும்! ஜானகி மீது ஊழல் விசாரணை!


நம்பர் 2


பால்கனியில் இருக்கும்போதே அதிகாரம் தூள் பறக்குதே!.. நாற்காலியில் உட்கார்ந்துட்டா என்ன பாடு படுத்துவாங்களோ!
முதல்வர் பதவி


சபாநாயகர் பதவி


பி.எச். பாண்டியன்
என் நாற்காலியை யாரும் பறிக்க முடியாது!


வெறும் விமானி! ஒண்ணும் தெரியாது! லஞ்ச ஊழல் ஆசாமி! அயோக்யர்!... முட்டாள்!
ஸ்பஷ்டமா மந்திர உச்சாடனம்! தளம் போட்டு நல்லா அர்ச்சனை பண்ணுவாங்க!






# கல்கி

1988 பிப்ரவரி 21
மலர்: 46 இதழ் 30
பிரபவ மாசி 9




# வெங்சர்க்காருக்குத் தண்டனை!

நமது மிகச் சிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரர்களுள் ஒருவரான வெங்சர்க்கார், நடத்தையிலும் தமக்கு நிகர் யாருமில்லை என்பதை இப்போது நிரூபித்திருக்கிறார். அவர் வெளிப்படுத்தியுள்ள உயரிய பண்பாடு, விளையாட்டுத் துறையில் மட்டுமின்றி, நமது அரசியல் — சமுதாய வாழ்க்கையிலும் அனைவரும் பின்பற்றத்தக்க ஒன்று.

இங்கு ஆட வருகின்ற அயல்நாட்டுக் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் பத்திரிகைகளில் எழுதுவதை நமது கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டினால் தடைசெய்ய முடியவில்லை. ஆனால் நமது ஆட்டக்காரர்கள் எழுதக்கூடாது என்று தடை உத்தரவு பிறப்பித்தது! இதற்கு ஒப்புதலளித்துக் கையெழுத்துப் போட்டுத் தரவேண்டும் என்றது. இது அநீதியான ஒரு கட்டுப்பாடு என்பதில் இரண்டாவது கருத்துக்கு இடமிருக்க முடியாது. நமது, கிரிக்கெட் பற்றி அயல்நாட்டவர் இங்கு வந்து, இங்குள்ள பத்திரிகைகளில் மட்டுமின்றி, அயல்நாட்டுப் பத்திரிகைகளிலும் எதை வேணுமானாலும் எழுத முடியும். ஆனால் அவர்கள் எழுதக்கூடிய தவறான கருத்துக்களை மறுத்துரைக்கக் கூட நமது ஆட்டக்காரர்களுக்கு உரிமையே இராது. இதை எல்லா ஆட்டக்காரர்களுமே உணர்ந்தார்கள். ஆனால் என்ன செய்வது என்று புரியாமல் தவித்தார்கள். வெங்சர்க்கார் போர்க்கொடி உயர்த்தத் துணிந்தார். காந்திய முறையில், சத்தியாக்கிரஹ நெறியில் அதனைச் செய்ததுதான் விசேஷம். கிரிக்கெட் கண்ட்ரோல் போர்ட் கேட்டுக் கொண்டபடி உறுதிமொழி எழுதித் தந்து விட்டுப் பின்னர் அதனை மீறிச் செயல்பட்டார்.

'கையெழுத்துப் போட்டுக் கொடுத்து விட்டுப் பிறகு மீறலாமா?' என்று கேட்பவர் உண்டு. 'இது என் மீது திணிக்கப்பட்டுள்ள அநீதியான உத்தரவு; அதனால் அதனை மீறுகிறேன்' என்று வன்மையாக வேறு எந்தவிதத்தில் அவரால் உணர்த்த முடியும்? சாத்துவீக சட்ட மறுப்பும் சத்தியாக்கிரஹமும் அப்போதுதானே உருவாகின்றன!

காவஸ்கர் பத்தி பத்தியாகப் பத்திரிகைகளில் எழுதிய போது சுட்டுவிரலைக் கூட அசைக்காத கண்ட்ரோல் போர்டு, வெங்சர்க்கார் மீது பாய்ந்தது. தண்டனையும் வழங்கியது. 'இன்னும் ஆறு மாதங்களுக்குக் கிரிக்கெட் ஆடக் கூடாது' என்று தடை போட்டதுடன் பத்தாயிரம் ரூபாய் அபராதமும் விதித்தது. அபராதத் தொகையைவிட, ஆட முடியாததால் வெங்சர்க்காருக்கு ஏற்படக்கூடிய பொருளாதார இழப்பும், உற்சாக இழப்பும் மிக அதிகமாக இருக்கும்.

இந்தத் தண்டனை பற்றி அறிய வந்த பிறகு வெங்சர்க்கார் நடந்து கொண்ட விதம் நெஞ்சை நெகிழச் செய்வதாக இருக்கிறது. 'பார்க்கலாம், ஒரு கை!' என்று அவர் தோள் தட்டிக் கொண்டு துள்ளவில்லை. மாறாக, 'எனக்கு அளிக்கப்பட்ட இந்தத் தண்டனை நியாயமானதே; அதைத் தலைவணங்கி ஏற்கிறேன்' என்றார். மகாத்மா காந்தி சட்டத்தை மீறுவார். பின்னர் நீதிபதியைப் பார்த்து, 'அநீதியான சட்டம் என்பதால் மீறினேன்; ஆனால் சட்டத்தை மீறியதென்னவோ குற்றம்தான்; எனவே, உங்கள் கடமையைச் செய்யுங்கள்; எனக்கு அதிகபட்சத் தண்டனை விதியுங்கள்' என்பார்! அந்தத் தர்மயுத்தம் தான் இப்போது நமக்கு நினைவு வருகிறது.

இதுமட்டுமல்ல; இன்னும் ஒருபடி உயர்ந்து சென்றார் வெங்சர்க்கார். 'எங்கள் காப்டன் கிரிக்கெட் ஆடக் கூடாது என்றால் நாங்களும் இனி ஆட மாட்டோம்' என்று இந்திய டெஸ்ட் அணியில் உள்ள ஒவ்வோர் ஆட்டக்காரரும் கண்ட்ரோல் போர்டுக்குக் கடிதம் எழுதினார்கள் — வெங்சர்க்கார் அவற்றை வாபஸ்பெறச் செய்தார்! அவர் விரும்பியிருந்தால் அந்தக் கடிதங்களின் அடிப்படையில் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டினை ஒரு தர்மசங்கடத்தில் ஆழ்த்தியிருக்க முடியும். 'வெங்சர்க்கார் மீதுள்ள தடை நீக்கப்பட்டால்தான் இனி டெஸ்ட் கிரிக்கெட்' என்ற நிலை கூட உருவாகியிருக்கலாம். ஆனால் வெங்சர்க்கார் அப்படி 'பிளாக்மெய்ல்' செய்வது போல் நடந்து கொள்ளவில்லை. கண்ட்ரோல் போர்டை மதித்து, அவர்கள் நல்லெண்ணத்தில் நம்பிக்கை வைத்து மிகக் கௌரவமாக நடந்து கொண்டிருக்கிறார். இதுவும், 'எதிராளியின் பலவீனத்தை நமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது' என்ற காந்திய தத்துவத்துக்கு இசைவானதே.

வெங்சர்க்கார் காண்பித்துள்ள கண்ணியத்தின் எதிரொலியைக் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டிடமும் நாம் எதிர்பார்க்கிறோம்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.





* விருதம்பட்டு—லெப்பை கிருஷ்ணபுரம் சாலை: அவ்வப்போது சரி செய்யப்படுகிறது.

* திருமலை கெமிகல்ஸ்: சுத்திகரிப்புச் சாதனம் இருப்பது உண்மையே!

வடாற்காடு மாவட்ட ரீ—விசிட்:

# ஆர்வத்தோடு செயல்படுகிறார்கள் அதிகாரிகள்!

வடாற்காடு மாவட்டத்துக்கு ரீ—விசிட் செய்யப் போகிறோம் என்ற அறிவிப்பைக் கல்கியில் கண்டதுமே, நம்மை வரவேற்கத் தயாரானதுடன், நாம் சென்ற முறை எடுத்துச் சொல்லியிருந்த எழுபத்திரண்டு பிரச்னைகளுக்கும் எந்த அளவுக்குத் தீர்வு காணப்பட்டிருக்கிறது என்பதைச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடமிருந்து பதில்களைப்பெற்று, ஒரு புத்தக வடிவில் தயாரித்து அனுப்பி வைத்துவிட்டார், வடாற்காடு மாவட்டக் கலெக்டர் எஸ். மாலதி! அதில் தீர்க்கப்பட்டதாகச் சொல்லப்படும் பிரச்னைகளுக்குச் சில உதாரணங்கள்:

•• ஜவ்வாது மலைமேலுள்ள புதூர் நாடு என்னும் ஊருக்கு இப்போது காலையிலும் மாலையிலும் பஸ் ஒன்று சென்று வருகிறது. அங்குள்ள மருத்துவமனையில் தண்ணீர்த் தட்டுப்பாடு தீர்க்கப்பட்டு விட்டது. பஸ் சென்று வருவதால் டாக்டரும் சென்று வருகிறார்.

•• ஜவ்வாது மலையிலுள்ள மேலூரில் இருக்கும் துவக்கப்பள்ளி ஓராசிரியர் பள்ளியாக இருப்பதால் அவர் விடுமுறையில் செல்லும்போது பிரச்னை எழுகிறது. எனவே, ஓராசிரியர் பள்ளிகளில் கூடுதலாக ஓர் ஆசிரியரை நியமிக்கக் கோரிக் கல்வித் துறைக்கு மனு அனுப்பப்பட்டுள்ளது.

•• குருசிலாப்பட்டு கிராமத்தில், குடிநீர் வழங்குவதற்கான மோட்டாருக்கு மின் இணைப்பு வழங்கப்படாமலிருந்தது இப்போது தீர்க்கப்பட்டுக் குடிநீர் வழங்கப்படுகிறது. அங்குள்ள ஆதிதிராவிட மக்களுக்கு வீட்டு மனை வழங்கவும் மயானத்திற்கு இடமளிக்கவும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

•• ஆம்பூர் நகராட்சியில் பணிக்கொடை வழங்கப்படாமலிருந்த ஐந்து பேருக்கும் இப்போது வழங்கப்பட்டு விட்டது.

•• 'தாயை இழந்தோம்; அரசியன் தயவையும் இழந்தோம்' என்ற தலைப்பில் 19.7.87 கல்கியில் வெளியான கட்டுரையில் சம்பந்தப்பட்ட அரக்கோணத்தைச் சேர்ந்த காலஞ்சென்ற ஆசிரியை சகுந்தலாவின் குடும்பத்திற்கும் பணிக்கொடை வழங்கப்பட்டு விட்டது. பணியில் இருக்கும் போதே ஆசிரியை சகுந்தலா இறந்ததின் காரணமாகக் கருணை அடிப்படையில் அவரது மகள் செல்வி. பத்மாவதிக்கு வேலை வழங்குவது குறித்தும் பரிந்துரை செய்து அனுப்பப்பட்டுள்ளது.

•• வாணியம்பாடி சேஷகிரிராவ் தெரு வடிகால் இப்போது கான்கிரீட் போடப்பட்டுச் சரிசெய்யப்பட்டு விட்டது.

•• அரக்கோணம் நேருஜி நகரைச் சேர்ந்த நடராஜன் என்பவரின் வீட்டுக்கு வரியாகப் போடப்பட்டிருந்த தொகையான 454 ரூபாய் இப்போது மேல் முறையீட்டில்



"பணிக்கொடை கிடைத்துவிட்டது. ஜி.பி.எப். கிடைக்க வேண்டும்..."



நாராயணபுரம்: பள்ளிக் கட்டடம் தயார்!

ரூ. 272.60 ஆகக் குறைக்கப்பட்டுள்ளது.

•• வாலாசா நூலகத்திலுள்ள இடநெருக்கடியைத் தவிர்க்க, ரூ. 2.75 லட்சம் செலவில் கட்டடத்தை விரிவுபடுத்தும் பணி தொடங்கப்படவுள்ளது.

•• ஆம்பூர் வாணியம்பாடி நகரங்களிலுள்ள நூற்றுக்கணக்கான தோல் பதனிடும் தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறும் சுத்திகரிக்காத கழிவு நீரால் ஏற்படும் பாதிப்பு (26.7.87 கல்கி இதழ் கவர் ஸ்டோரி பார்க்க)களைத் தடுக்க இப்போது இருநூற்று இருபது லட்சம் செலவில் ஒரு சுத்திகரிப்பு நிலையம் அமைக்கும் வேலை துவங்கி விட்டது. இந்தியாவிலேயே தோல் பதனிடும் தொழிலகங்களிலிருந்து வெளியேறும் கழிவுநீரைச் சுத்திகரிக்கும் முதலாவது நிலையம் என்கிற பெருமையும் இதற்கே உண்டு.

இப்படி கலெக்டர் கொடுத்த பட்டியல் நீண்டு கொண்டே செல்லும் நிலையில், அவையெல்லாம் உண்மையான தகவல்கள்தானா என்பதைக் கண்டறியக் குறிப்பிட்ட சில இடங்களுக்கு நேரில் சென்று பார்த்தோம்.

விருதம்பட்டு – லெப்பை கிருஷ்ணபுரம் சாலை பதினான்கு ஆண்டுகளாகப் பராமரிக்கப்படவில்லை என்று முன்பு நாம் சுட்டிக் காட்டியிருந்தோம். இப்போது பராமரிக்கப் படுவதாகக் கலெக்டர் எழுதியிருப்பது உண்மைதான் என்பதை நேரில் சென்ற போது கண்டோம்.

அதேபோல், கன்னிகாபுரம், நாராயணபுரம் ஆகிய கிராமங்களுக்குப் பூட்டுத் தாக்கு என்னும் ஊரிலிருந்துதான் பாலாற்றில் வெட்டப்பட்ட கிணற்றிலிருந்து குடிதண்ணீர் செல்ல வேண்டும். முன்பு ஆறு குதிரைச் சக்தியுள்ள மோட்டார்தான் கிணற்றில் பொருத்தப்பட்டிருந்ததுஎன்பதால்கன்னிகாபுரம்,நாராயணபுரம்ஆகியகிராமங்களுக்குக் குடிநீர் செல்லாமல் இருந்தது. இப்போது ஒன்பது குதிரைச் சக்தியுள்ள மோட்டார் பொருத்தப்பட்டுச் சீராகக் குடிநீர் விநியோகம் நடைபெற்று வருவதையும் நேரில் சென்று கண்டோம். மேலும் நாராயணபுரத்தில் முன்பு கட்டி முடிக்கப்படாமலிருந்த துவக்கப்பள்ளிக்கட்டடமும்தற்போது கட்டி முடிக்கப்பட்டிருப்பதை நேரில் பார்த்தோம்.



நாராயணபுரம், கன்னிகாபுரம்: இப்போது குடிநீர் கிடைக்கிறது!



கழிவுநீரைச் சுத்திகரிக்கச் சுத்திகரிப்பு நிலையம் தயாராகிறது...

இது மாதிரி ஏராளமான பிரச்னைகளுக்குத் தீர்வு காணப்பட்டிருந்தாலும் இன்னும் சில பிரச்னைகளில் முன்பு அதிகாரிகள் அளித்த பதில்களில் முரண்பாடுகள் இருந்ததால் உண்மை என்ன என்பதைக் கண்டறியக் கடைசியில் கலெக்டர் எஸ். மாலதியைச்



* கலெக்டர் மாலதி: சுறுசுறுப்பாக இருக்கிறார்



* சண்முகம்: ''கல்கியில் செய்தி வந்ததும் அடித்தார்கள்...''

சந்தித்தோம். அப்போது சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் உடனிருந்தார்கள்.

''முன்பு, 'குறைகள் — குறைகளைத் தீர்க்க வேண்டியவர்களுக்கும் குறைகள்!' என்ற தலைப்பில் வெளியான கட்டுரையில், குருசிலாப்பட்டிலுள்ள ஷெர்புன் பீவியின் வீட்டை அவரது கணவரின் தங்கை ஜிலேகா பூட்டை உடைத்துச் சென்று ஆக்கிரமித்தது குறித்து ஷெர்புன் பீவி உள்ளூர் போலீஸ் ஸ்டேஷனில் புகார் ஏதும் தரவில்லையென்று சப் — இன்ஸ்பெக்டர் பெரியசாமி எங்களிடம் தெரிவித்திருந்தார். ஆனால் ஷெர்புன் பீவி அதுகுறித்துக் கடந்த 25.4.87 — இல் புகார் கொடுத்திருக்கிறார் என்று இப்போது தெரிகிறது. சப் — இன்ஸ்பெக்டர் எதற்காக எங்களிடம் பொய் சொன்னார்?'' — இது நாம்.

உடனே கலெக்டர் அருகிலிருந்த மாவட்டக் காவல்துறையின் உதவிக் கண்காணிப்பாளர் ரங்கையனிடம் அதுபற்றிய கோப்புகளைப் பார்க்கச் சொன்ன போது, ஷெர்புன் பீவி புகார் கொடுத்திருப்பது உண்மையென்று தெரிய வந்தது! எனவே, மறுபடியும் அதுபற்றி விசாரிக்கக் கேட்டுக் கொண்டார் கலெக்டர்.

அதேபோல், முன்பு ராணிப்பேட்டையிலுள்ள திருமலை கெமிக்கல்ஸில் கழிவுநீர்ச் சுத்திகரிப்புச் சாதனம் இல்லவே இல்லையென்று மாவட்டச் சுற்றுப்புறச் சூழல் மாசுக் கட்டுப்பாடு மண்டல அலுவலர் அடித்துச் சொல்லியிருந்ததை நாம் வெளியிட்டிருந்தோம். அது தவறு என்று நமக்குத் திருமலை கெமிக்கல்ஸின் நிர்வாக அதிகாரி டி. பி. ராமன் எழுதியிருந்ததைப் பற்றிக் கேட்டோம். அதற்கு, திருமலை கெமிக்கல்ஸில் கழிவுநீர்ச் சுத்திகரிப்புச் சாதனம் இருப்பதை இப்போது ஒப்புக்கொண்டார்கள் அதிகாரிகள். முன்பு கொடுக்கப்பட்ட தவறான தகவலுக்காக வருத்தமும் தெரிவித்தார்கள்.

மேலும், அரக்கோணத்திலுள்ள ஆதி திராவிடர் நலப்பள்ளியின் தலைமை ஆசிரியையாகப் பணியாற்றிய திருமதி சகுந்தலா, பணியின் போது இறந்ததற்காக அவரது குடும்பத்திற்குச் சேர வேண்டிய பணிக்கொடை இப்போது வழங்கப்பட்டு விட்டாலும், இன்னும் தரப்பட வேண்டிய ஜி.பி.எப். பற்றியும் கருணை அடிப்படையில் அவருடைய மூத்த மகளுக்குத் தரவேண்டிய வேலை வாய்ப்பு பற்றியும் எடுத்துச் சொல்லி நடவடிக்கைகளை விரைவுபடுத்துமாறு கேட்டுக் கொண்டோம்.

தவிர, ஆம்பூர் நகராட்சியில் பழுதடைந்து கிடக்கும் லாரியை ஏலம் விடுவது தொடர்பாக, நகராட்சி நிர்வாக இயக்குனரகத்தில் தான் தாமதிக்கப்படுகிறது என்ற முந்தைய பதிலில் உண்மையில்லை; தாமதத்திற்குக் காரணம் ஆம்பூர் நகராட்சியே என்றும் கலெக்டரிடம் எடுத்துச் சொன்னோம்.

இவற்றோடு குருசிலாப்பட்டு கிராமப் பிரச்னைகள் பற்றி முன்பு கல்கியில் வெளிவந்த மறுநாளே செய்திகளைக் கொடுத்தது அங்குள்ள ஊராட்சி மன்ற உறுப்பினர் சண்முகம்தான் என்று அவரைச் சிலர் அடித்து நொறுக்கியது பற்றியும் எடுத்துச் சொல்லி உண்மைகளைக் கண்டறிந்து நடவடிக்கை எடுக்கக் கேட்டுக் கொண்டோம். கூடவே இந்த ரீ — விசிட்டின் போது நமக்கு அனுப்பப்பட்டிருந்த சில புதிய பிரச்னைகளையும் எடுத்துச் சொன்னோம். எல்லாவற்றையும் கலெக்டர் கவனமாகக் கேட்டுக் கொண்டு, தேவையான நடவடிக்கைகளை எடுப்பதாக உறுதியளித்தார். எடுப்பார் என்றும் நம்புகிறோம்.

ஆக, பல பிரச்னைகளுக்கு உடனடியாகத் தீர்வு கண்டும், பல பிரச்னைகளின் தீர்வுகளுக்கான நடவடிக்கைகளை விரைவுபடுத்தியும் ஆர்வத்தோடு செயல்பட்டுக் கொண்டிருக்கும் வடாற்காடு மாவட்டக் கலெக்டர் எஸ். மாலதிக்கும் மற்ற அனைத்து அதிகாரிகளுக்கும் மாவட்ட மக்கள் சார்பிலும் கல்கியின் சார்பிலும் மிக்க நன்றி. நாம் எந்தெந்தப் பிரச்னைகள் பற்றிப் பேசப் போகிறோம் என்பதைத் தெரிந்து கொண்டு, நாம் பதில்களைப் பெற வசதியாகக் கலெக்டருக்கும் நமக்கும் ஒரு பாலமாக விளங்கி ஒத்துழைப்புத் தந்த செய்தி — மக்கள் தொடர்பு அலுவலர் கார்மேகம் மற்றும் உதவி அலுவலர் கலைமணி ஆகியோருக்கும் நமது நன்றி.

— பிரின்ஸ்

---

**அடுத்த இதழில்......**

* எந்த பட்ஜெட்
நல்ல பட்ஜெட்?

— சி. எஸ். விளக்குகிறார்......



*Boost is the secret of my energy!*

"பதினைந்து அல்லது இருபது ஓவர்கள் பந்து வீசக அல்லது செமத்தியாக அடிக்கும் பேட்டிங். களத்தில் எப்போதும் ஓட்ட சாட்டம், எமது உத்திகளைக் கையாளுதல். இப்படித்தான் என்னுடைய கிரிக்கெட்டை நான் ரசித்து விரும்புகிறேன்.

இதற்கு உடல் தகுதியான நிலையில் இருப்பதும், ஏராளமான சக்தியும் தேவை. அதனால்தான் நான் ஆண்டு முழுவதும் கடினமாகப் பயிற்சி செய்கிறேன். அதனால்தான் நான் பூஸ்ட் குடிக்கிறேன் நாள் தோறும்."



கபில்தேவ் பூஸ்ட் பருகுவதற்குக் காரணம், அது அவருக்குத் தேவையான சக்தியையும் அவர் விரும்பும் சுவையையும் அளிக்கிறது. பூஸ்டில் கிரீம் நிறைந்த பால் மற்றும் ஆரோக்கியமான மால்ட்டின் குண நலன்களுடன் கோக்கோவும் கலந்துள்ளது.

கபிலைக் கேளுங்கள். அது அவரது ரகசியம்.




# பூஸ்ட்

## இன்சுவைமிக்க சக்தி

HTA 5080 TAM

6

# ஆகவே, செக்ஷன் 302 படி...

நிவிதா அலுவலகம் வந்தாள்.

அந்தோணி, ''குட் மார்னிங் பேபி!'' என்றார். பதிலுக்கு வாழ்த்தி விட்டுத் தன் நாற்காலிக்கு வந்து அமர்ந்தாள். பக்கத்து மேஜையில் நாராயணன் கொளுத்தி வைத்திருந்த ஊதுபத்தி மென்மையான வாசனையைப் பரப்பிக் கொண்டிருந்தது. தன் டைப் ரைட்டரின் உறையைக் கழற்றி விட்டு பிரஷ் கொண்டு தூசி துடைத்துக் கொண்டிருந்த விமலா திரும்பிப் பார்த்து, ''ஹலோ!'' என்றாள்.

''ஹலோ!'' என்றாள் நிவிதா.

மேஜையை ஒழுங்குபடுத்திவிட்டு, நேற்று செய்து கொண்டிருந்த வேலையின் தொடர்ச்சியை ஆரம்பித்தாள். மனம் முழுதாக ஈடுபட ஒத்துழைப்புத் தராமல் சண்டித்தனம் செய்தது.

பூங்கொத்து அனுப்பினது யார்?

மறுபடி, மறுபடி அதே கேள்வி மனத்தைப் பிறாண்டியது. இது சின்ன விஷயமல்ல. ஓர் இளம் பெண்ணுக்கு அறிமுகமே இல்லாத எவனோ பூங்கொத்து அனுப்புவது விளையாட்டான விஷயமல்ல. சீட்டில் இருந்த வாக்கியத்திலும் உள் அர்த்தங்கள் இருக்கின்றன.

இது ஒரு நாகரிகமான தூண்டில். தூண்டில் முனையில் பொருத்தப்படும் புழுவுக்குப் பதிலாகப் பூங்கொத்து! ஒருவகையில் என் சுதந்திரத்தில் அத்துமீறித் தலையிடுதல். ட்ரெஸ் பாஸ்! அனுமதி இல்லாமல் வீட்டுக்குள் நுழைவது மட்டும்தான் சட்ட மீறலா? இதுவும் ஒரு வகை மீறல். உரிமை மீறல்.

நிவிதா சுபாவத்திலேயே கொஞ்சம் படபடப்பானவள். சின்ன விஷயத்திலும் ஒழுங்கு பார்ப்பவள். வீட்டில் புத்தகம் படித்து விட்டு யாராவது கண்ட இடத்தில் போட்டாலோ, அடையாளத்திற்கு மூலை மடக்கினாலோ கூடக் கத்துவாள். அறை சுத்தமாக இருக்க வேண்டும். உடைகள் சுத்தமாக இருக்க வேண்டும். நகங்கள் சுத்தமாக இருக்க வேண்டும். மனமும் சுத்தமாக இருக்க வேண்டும்.

''மத்தியானம் எங்கே போய்ட்டு வந்தே முருகேசு?''

''ஏன்க்கா, ஸ்கூலுக்குத்தான்.''

''எப்பயிலேர்ந்து உன் ஸ்கூலைக் கலையரங்கம் தியேட்டருக்கு மாத்தினாங்க?''

''இல்லையே... வந்து...''

''டேய்! பொய் சொன்னே... பல்லுலயே போடுவேன். உன்னை சினிமாப் பார்க்கக் கூடாதுன்னு சொல்லியிருக்கேனா? கிளாஸைக் கட் பண்ணிட்டுப் போற அளவுக்குத் தைரியம் வந்துடிச்சா உனக்கு?''

''சத்தியமா இனிமேல் போக மாட்டேன்க்கா.''

கற்பூரம் உடனே பற்றிக் கொள்ளக் கூடியது. ஊதினால் உடனே அணையவும் கூடியது. அதுபோல....

''முருகேசு சாப்ட்டானும்மா?''

''இல்லே.''

''ஏன்?''

''ரூம்ல படுத்து அழுதுக்கிட்டிருக்கான். வர மாட்டேங்கறான். சொல்லிப் பார்த்துட்டேன்.''

''இரு. நான் போயிக் கூட்டிக்கிட்டு வர்றேன்.''

நிவிதா அறையில் குப்புறப்படுத்து லேசாக முதுகு குலுங்க விம்மிக் கொண்டிருந்த முருகேசின் தோளைத் தொட்டு...

''எந்திரி. சாப்பிட வாப்பா.''

''இல்லே. நான் வரலே.''

''அப்படி என்ன சொல்லிட்டேன் உன்னை? உன் நல்லதுக்குத்தானே சொன்னேன். சரி சரி, வாடா.''

''நீ திட்டினதுக்கா அழலே.''

''பின்னே?''

''திட்றமாதிரி நடந்துக்கிட்டேனேன்னு தான் அழறேன்.''

''உணர்ந்ததே போதும். எந்திரிச்சி வா.''

''நான் இன்னைக்குச் சாப்பிடப் போறதில்லே.''

''மனசு செஞ்ச தப்புக்கு வயித்தை ஏன் தண்டிக்கிறே? நீ வரலேன்னா நானும் சாப்பிடறதா இல்லே. அம்மா, சாதத்துல தண்ணி ஊத்திட்டுப் போய்ப் படு.''

தன் படுக்கையில் கவிழ்ந்தாள். அழுகிற அளவுக்குத் தம்பியைக் காயப்படுத்தி விட்டோமோ? சின்னச் சின்ன மீறல்களில் ருசி தேடும் வயதுதானே இது! நண்பர்களின் வற்புறுத்தலால் கிளாஸ் கட் செய்திருக்கலாம். இது ஒரு மகா குற்றமா? அமிலமாய் வார்த்தைகளைச் சிந்த வேண்டிய அளவுக்கான தப்பா? ஓர் இதமான சந்தர்ப்பத்தில், பக்குவமாய் மனத்தில் படும்படி இனிய வார்த்தைகளில் இதைச் சொல்லிக் காட்டியிருக்க முடியாதா?

இதுதான் நிவிதா. கண்டிப்பான முறையில் நடந்து கொள்ள வேண்டியது. ஆனால்

பட்டுக்கோட்டை பிரபாகர்

அப்படி நடந்து கொண்டிருக்கக் கூடாதோ என்று நாள் கணக்கில் தன்னையே நொந்து கொள்வது, வெளியில் உணர்ச்சிவசப்படுவது — பலம். உள்ளுக்குள் ரகசியமாய் உணர்ச்சிவசப்படுவது — பலவீனம். ஒரு போதும் தன் பலவீனத்தை வெளிக் காட்டிக் கொள்ளாமல் நடந்து கொள்வது மற்றொரு பலம்.

இப்படித்தான் ஒரு முறை...

திருச்சியில் தன் அலுவலகத்திற்கு அருகே வீடு திரும்ப பஸ்ஸுக்காகக் காத்திருந்த போது... தயங்கித் தயங்கி அவன் அருகில் வந்தான். இவள் திரும்பிப் பார்க்க, சடக்கென்று நின்று பஸ் வரும் திசையைப் பார்த்தான்.

ஒரு வாரமாக அவனை அதே பஸ் ஸ்டாப்பில் தினமும் அதே நேரத்தில் பார்க்கிறாள் நிவிதா. நேரெதிர் பெட்டிக் கடையருகில் சிகரெட் புகைத்துக் கொண்டிருப்பான். தன் சைக்கிளின் மணியை அனாவசியத்திற்கு அடிப்பான். கவனத்தைக் கவர்கிறானாம்.

அன்று தைரியம் பெற்று கிட்டே வந்தவன், ''எக்ஸ்க்யூஸ் மி'' என்பதை ஊகித்துக் கொள்கிற மாதிரிதான் உச்சரித்தான். தூரத்திலிருந்து வைத்த கண் வாங்காமல் பார்க்கிற தைரியம் அருகாமையில் காணோம்.

''என்ன?'' என்ற நிவிதாவின் முகத்தை நேருக்கு நேர் சந்திக்கத் தயங்கினான்.

''வந்து... வந்து'' என்று ஓராயிரம் தடவைகள் உதடுகளை ஈரம் செய்து கொண்டு, லேசாக நடுங்கும் விரல்களால் பாண்ட் பாக்கெட்டில் இருந்து நான்காக மடக்கின காகிதம் எடுத்து, ''நான்... உங்களை... இதில் விவரமா எழுதியிருக்கேன்'' என்று நீட்டினான்.

பஸ் ஸ்டாப்பில் சொற்ப மனிதர்கள் வெற்றிலை போடுவதிலும், உட்கார்ந்து குழந்தைக்குப் பால் கொடுப்பதிலும், கிராதியில் உட்கார்ந்து மாத நாவல் படிப்பதிலும் ஈடு

**ரூ. 1000/— பரிசு!**

இந்தக் கதை 26 வாரங்கள் தொடரும். சுமார் 20, 22 அத்தியாயங்கள் முடிந்ததும் கதை தொடர்பாகச் சில கேள்விகள் தரப்படும். ஓரிரு வார்த்தை பதில்களை ஒரு தபால் கார்டில் நீங்கள் எழுத வேண்டியதுதான்!

கடைசிக் கேள்வியை இப்போதே கூறி விடுகிறோம்!: ''இந்தத் தொடரில் உங்களை மிகவும் கவர்ந்த, 'நறுக்'கென்றமைந்த நாலு வரிகள் எவை?''

எனவே, கவனமாகப் படித்து வருவதுடன், 'நறுக்' வரிகளை அவ்வப்போது குறித்து வைத்துக் கொள்ளவும்!

— ஆசிரியர்.



பட்டிருக்க.. இவர்களை யாரும் கவனிக்க வில்லை.

கடிதத்தை நிவிதாவின் ஹேண்ட் பேகின் வெளிப் பகுதியின் திறப்பில் செருகி விட்டு வேகமாக நடந்த அவளை, "மிஸ்டர், இங்கே வாங்க" என்றாள்.

அவரவர் செய்கைகளிலிருந்து கலைந்து இவள் அழைத்ததையும், அவன் ரொம்ப ரொம்ப தயக்கமாய் அவளருகில் வந்ததையும் பார்க்க ஆரம்பிக்க...

"என்ன இது, லவ் லெட்டரா?"

அமைதியாய் இருந்தான். எச்சில் விழுங்கினான்.

கடிதத்தை அப்படியே இரண்டாய், நாலாய், எட்டாய் என்று பொடித் துண்டுகளாய்க் கிழித்து, "காதலைப் பிச்சை எடுக்க முடியாது மிஸ்டர். உருப்படியா ஏதாச்சும் பொழைப்பு இருந்தா பாருங்க. மறுபடி வம்பு வச்சிக்கிட்டா போலீஸ்கிட்டே புகார் பண்ணுவேன்" என்று அவளை நோக்கி வீசி எறிய...

அந்த இடம் முழுக்கத் துண்டுக் காகிதங்களாய் நிரம்ப, கடந்த பஸ்ஸின் காற்றில் அதன் பின்னால் பறந்தன. அவன் விருட்டென்று சென்று சைக்கிளை எடுத்துக் கொண்டு மறைந்தான்.

"நீ செஞ்சதுதாம்மா கரெக்ட்டு. இப்படித்தான்மா செய்யணும். பொழுது விடிஞ்சி பொழுது போனா இதே பொழைப்பு சில பசங்களுக்கு" என்றார் வெற்றிலைப் பெரியவர்.

வீடு வந்து, முகம் கழுவி, மொட்டை மாடியில் அமர்ந்து ஊறுகாய் தொட்டுக் கொண்டு முறுக்கு சாப்பிட்டபோது மனத்தின் படபடப்பு அடங்கி இன்னொரு நிவிதா கறுப்பு அங்கி மாட்டிக் கொண்டு வந்து அவளை நோக்கிச் சுட்டு விரலை உயர்த்த ஆரம்பித்தாள்:

"நீ செஞ்சது தப்பு!"

"ஏன்?"

"எல்லோருக்கும் முன்னாடி நீ கண்ணகியாக்கும், உன்கிட்டே யாரும் வாலாட்ட முடியாதாக்கும்னு உன் செயலால பீத்திக்கிட்டிருக்கே. அவன் என்ன உன்னைக் கையைப் பிடிச்சி இழுத்தானா?"

"அதுசரி. அநாகரிகமா பொது இடத்தில லவ் லெட்டர் கொடுத்தது தப்பு இல்லையா?"

"பஸ்ஸில் இமைக்கிற நேரத்திலே உன்னைச் சில வக்ரமான கைகள் தகாத இடங்கள்ல தீண்டிப் பார்த்ததில்லே? அதை விட இவன் என்ன கீழ்த்தரமா செஞ்சுட்டான்? அவன் உன்னை லவ் பண்றான். தப்பா? அதை வெளிப்படுத்தின முறை வேணும்னா தப்பா இருக்கலாம். அவன் தயங்கித் தயங்கி உன் பக்கத்திலே வர்றப்பவே அவன் எதுக்காக ஆரம்பிக்கிறான்னு உனக்குப் புரிஞ்சுதா, இல்லையா?"

"புரிஞ்சுது.

"டப்புன்னு மூஞ்சில அடிச்ச மாதிரி பதில் எதுவும் பேசாம நடந்து விலகிப் போயிருக்கலாம். அந்தச் செயல்ல உனக்கு இதிலே எல்லாம் ஆர்வம் இல்லைன்னும் உணர்த்த முடியும். அவனை அவமானப்படுத்த வேண்டியும் அவசியப்பட்டிருக்காது."

"இப்ப என்ன சொல்றே?"

"அவன் நடந்துக்கிட்டது தப்புதான். ஆனா உன் ரியாக்ஷன் அதிகம். தேவைக்கு அதிகம். உன் கோபத்தில கொஞ்சம் பாசாங்கு இருந்திச்சி. அவனை அவமானப் படுத்தினதில உன் மனசுல ஒரு மமதை லேசா வந்திச்சி."

தன்னைத் தானே கடுமையாக விமர்சித்துக் கொண்ட நிவிதா அன்றைக்கு இரவு உறக்கம் துறந்தாள். வேறு வகையில் நடந்து கொண்டிருக்கலாமோ என்று மனத்தைப் போட்டுக் கசக்கிக்கொண்டாள். எந்த நிகழ்ச்சிக்கும் காட்டமாய் உணர்ச்சிவசப்பட்டு நடந்துகொண்டு, பிறகு தனிமையில் வருந்திக் கொண்டு, தன்னை வருத்திக் கொள்ளும் நிவிதா...

"அம்மா! அட உங்களைத்தான்மா" என்ற ப்யூனின் குரலில் கலைந்தாள்.

"ம்? என்னங்க?" என்றாள்.

"சரியாப் போச்சி. ஏதோ பார்சல் உங்க பேருக்கு வந்திருக்கு.

வாங்கிக்கங்கன்னு மூணாவது தடவை சொல்றேன் நான்."

அப்போதுதான் மேஜைமேல் ப்யூன் வைத்திருந்த பிரௌன் நிறத்துப் பெரிய பார்சலைக் கவனித்தாள் நிவிதா. பார்சலா? எனக்கா? யாரிடமிருந்து?

அவனை அனுப்பிவிட்டு, பார்சலைத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள்.

அனுப்பியவர் பெயரோ, விலாசமோ இல்லை.

இவளின் முகவரி, 'மிஸ் நிவிதா' என்று துவங்கிக் கம்பெனியின் விலாசம் தெளிவாக ஆங்கிலத்தில் டைப் செய்யப்பட்டிருந்தது.

வாட்டர் கூலரில் தண்ணீர் குடித்துவிட்டுத் திரும்பிய விமலா, அவள் மேஜையைக் கடக்கும் போது நின்று, "என்னங்க, இது பார்சல்?" என்றாள்.

"தெரியலே. யார் அனுப்பியிருக்காங்கன்னு தெரியலே. ஆனா என் விலாசம் சரியா இருக்கு!"

"பிரிச்சிப் பார்த்தாத் தெரியுது. இதான் மெட்ராஸ்ன்னு போட்டிருக்கே. இங்கே லோக்கல்லேர்ந்துதான் அனுப்பியிருக்காங்க!"

கத்திரிக்கோல் எடுத்து நிவிதா பார்சல் மேல் கட்டப்பட்டிருந்த கயிற்றை வெட்டினாள். காகிதத்தைப் பிரித்தாள். உள்ளே பாலிதீன் கவருக்குள்ளிருந்து நழுவி அவள் மடியினில் விழுந்தது அந்த வெளிநாட்டுச் சேலை.

"அட! சேலைங்க. கலர் அட்டகாசமா இருக்கு. உங்க நிறத்துக்கு இது ரொம்ப தூக்கலா இருக்குங்க நிவிதா," என்று விமலா சேலையை எடுத்து நிவிதாவின் மேல் குறுக்காகப் போட்டு அழகு பார்க்க... சேலைக்குள்ளிருந்து சறுக்கிக் கீழே விழுந்த அட்டையைக் குனிந்து எடுத்தாள் நிவிதா.

# ஏன்?



ஏனெனில் திருமதி ஐயங்கார் அன்று இரவு படுக்கைக்குப் போகுமுன், மிகவும் அசதியாய் இருந்ததால், காஸ் ரெகுலேட்டரை மூட மறந்து விட்டார். துரதிருஷ்டவசமாய், ஸ்டவ்வின் ஒரு பர்னரை சரியாக மூடாமல் இருந்ததால், அதன் வழியாக காஸ் கசியத் தொடங்கியுள்ளது.

அடுத்த நாள் அதிகாலையில் காபி போடுவதற்காக சமையலறைக்குச் சென்றார். அவர் காஸ் வாடையை நுகர்ந்தார், ஆனால் அவர் தூக்கக் கலக்கத்தில் அந்த அபாயமான அறிகுறியின் மேல் கவனம் செலுத்தவில்லை. தீக்குச்சியை பற்ற வைத்தார்...

அவ்வளவுதான்...திருமதி ஐயங்கார் சிறிது காயங்களுடன், பெரிய விபத்துக்கு உள்ளாகாமல் தப்பிப் பிழைத்தார். ஆனால் நீங்களும் அவரைப் போன்று அதிர்ஷ்டசாலியாக இருப்பீர்கள் என்பது என்ன நிச்சயம்...

# எப்படி?

**இதுபோன்ற சூழ்நிலை உங்களுக்கு நிகழாதிருக்கும்படி எச்சரிக்கையாய் இருங்கள்.**



எப்போதும் இரவில் ரெகுலேட்டரை மூட மறவாதீர்கள்.

**இண்டேனின் இரண்டு நிமிட LPG (எல்பிஜி) பாதுகாப்பு முறையைப் பின்பற்றுங்கள்:**

**அதிகாலையில் சமையலறைக்குள் போன முதல் நிமிடம்,** காஸ் வாடை அடிக்கிறதா என்று பாருங்கள். அப்படி காஸ் வாடை இருந்தால், கீழே, கொடுக்கப்பட்டுள்ள முன்னெச்சரிக்கைகளைப் பின்பற்றவும். காஸ் வாடை இல்லையெனில் நீங்கள் ரெகுலேட்டரை திருப்பலாம். அவ்வாறு திறக்கும்போது ரப்பர் ட்யூபில் எவ்வித வெடிப்பும் இல்லாது இருக்கிறதா என்று கவனிக்கவும்.

பர்னரை திறக்கும் முன் தீக்குச்சியைப் பற்றவைத்துப் பார்க்கவும்.

**இரவில் கடைசியாக சமையலறை லைட்டை அணைத்துவிட்டு வரும் முன்,** ரெகுலேட்டரை மூடவும், பிறகு பர்னர்கள் முழுமையாக மூடி இருக்கின்றனவா என்று உறுதி செய்து கொள்ளவும்.

**காஸ் வாடை வந்தால் உடனடியாக செய்ய வேண்டியவை.**

- ரெகுலேட்டர் மற்றும் பர்னர்களை மூடவும்.
- எல்லா திறந்த சுடர்களையும் அணைத்து விடவும்—ஊதுவத்தியைக் கூட.
- காஸ் வெளியேறும் வகையில் ஜன்னல்களையும் கதவுகளையும் திறந்துவிடவும்.
- லைட்/ஃபான் போன்றவற்றை போடவோ அணைக்கவோ கூடாது. அதனால் ஏற்படும் ஒரு சிறிய தீப்பொறிகூட பெரிய வெடி விபத்தை உண்டாக்கலாம்.
- தொடர்ந்து காஸ் வாடை இருக்குமானால், இண்டேன் விநியோகஸ்தரை உடனடியாக அழைக்கவும்.

**தினந்தோறும் பாதுகாப்பிற்காக இரு நிமிடங்களை ஒதுக்குங்கள்.**





**Indane**

பொதுமக்கள் நலனைக் கருதி வெளியிட்டோர்—இந்தியன்ஆயில்

Shilpi IOC 8A/88 Tam



## அருள்வாக்கு

ஐஸும் ஸ்படிகமும் ஒரே மாதிரி தான் வெளிப் பார்வைக்கு இருக்கின்றன. ஆனால் ஐஸ்தான் உருகி ஜலமாகுமே தவிர, ஸ்படிகம் ஜலமாகாது. ஏனென்றால் எது ஜலமாகவே இருந்து அப்புறம் உறைந்து வேறே வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறதோ அதுதான் உருகி மறுபடியும் தன் ஸ்வயமான பூர்வ ரூபத்தை அடைய முடியும். பிரம்மமே ஜீவனாக உறைந்து போயிருப்பதால்தான், இந்த ஜீவாத்மாவும் உருகிப் போனால் மறுபடியும் பிரம்மமாகவே அனுபவத்தில் ஆக முடிகிறது.

ஐஸ் தானாகக் கரைகிறது. நாம் கரைய மாட்டோம் என்கிறோம்.

கல்லேனும் ஒரு காலத்தில் உருகும்
என் கல்நெஞ்சம் உருகவில்லையே!

என்று தாயுமான ஸ்வாமிகள் நம் நிலைக்கு இறங்கி வந்து நமக்காகத்தான் பாடியிருக்கிறார்.

நம்மை உருக வைக்க ஒன்று தேவைப் படுகிறது. பாரமார்த்திகத்தின் பக்கமே போக மாட்டேன் என்று அடம்பிடிக்கிற நம்மைக் கட்டி இழுக்க ஒருத்தர் வேண்டும். அப்படி ஒருத்தர் இருக்கிறாரா? நம்மை நம்முடைய நிஜ, நாமாக ஆக்கக் கூடிய ஒருத்தர் இருக்கிறாரா?

இருக்கத்தான் செய்கிறார்.

நமக்கு நம் பரமாத்மதத்வத்தை எடுத்துச் சொல்லி, அதை நாம் அனுபவமாக்கிக் கொள்வதற்கான ஸாதனைகளைச் செய்ய வைத்து, நம் கர்மா பாக்கி தீருவதற்காகத் தாமே தபஸைச் செலவு செய்து உபகாரம் பண்ணும் அந்த ஒருத்தர்தான் குரு என்பவர்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

நேற்று பூங்கொத்துடன் வந்த சீட்டில் இருந்த அதே கையெழுத்து. அதே இளம் பச்சைநிற ஸ்கெட்ச் பேனாவால் எழுதப் பட்ட எழுத்துக்கள்.

'நிவிதா, இழந்த என் நித்திரையைத் தா. உன் சந்தன மேனிக்கு இந்தச் சேலை — என் எளிய சமர்ப்பணம். நான் யார் என்று உன் புருவம் வினைக்குறி வரைகிறதா? இந்த வினாடி கூட உன்னைப் பார்த்துக் கொண்டே இருக்கிறேன், புரிகிறதா?'

நிவிதா சட்டென்று தலையுயர்த்தி அந்தப் பெரிய ஹாலை முழுக்கப் பார்த்தாள். வரிசை, வரிசையாய் மேஜைகள், நாற்காலிகள், டைப்ரைட்டர்கள், போன்கள். எழுதிக் கொண்டு, டைப்படித்துக் கொண்டு, போனில் பேசிக் கொண்டு, நடந்து கொண்டு, எத்தனை ஆண்கள்!

இவர்களில் ஒருவன்தான் இவன்!

நிவிதாவுக்கு ஜிவ்வென்று முகம் சிவந்தது. புடைவையால் என்னை வாங்கி விடலாம் என்று எத்தனை கீழ்த்தரமாய் எடை போட்டிருக்கிறான்! எனக்கு உடை அனுப்ப இவனுக்கு என்ன உரிமை இருக்கிறது?

இதற்குள் அந்தச் சீட்டைப் படித்து விட்ட விமலா, "நானும் இந்தக் கம்பெனில எட்டு வருஷமா வேலை பார்க்கிறேன், ஒரு ஹேர் பின் கூட யாரும் வாங்கித் தந்ததில்லை" என்று சிரிக்க...

"சிரிக்காதீங்க. சிரிக்கிற விஷயமா இது?" என்று கோபமாய்க் கேட்ட நிவிதா எழுந்தாள்.

"விலாசம் இருந்தாலாவது போய்ச் சட்டையைப் பிடிக்கலாம். கோபப்பட்டு என்ன செய்ய முடியும்?"

"என்ன செய்ய முடியும்னு காமிக்கிறேன்."

நிவிதா அந்தப் புடைவையைக் கவரில் போட்டு எடுத்துக் கொண்டு நேராய் ஜெனரல் மானேஜர் அறைக்கு நடந்தாள். வாசல் பியூனிடம் சொல்லியனுப்பி அனுமதி வாங்கி, உள்ளே வந்ததும் படபடவென்று பொரிந்தாள்.

"இதே ஆபீஸ்ல வேலை பார்க்கிற ஒரு ஸ்கவுண்ட்ரல் எனக்குப் புடைவை அனுப்பி இருக்கான் சார். இந்த லெட்டரைப் படிங்க. நேத்து இதே ஆளு என் ஹாஸ்டலுக்கு ஒரு பொக்கே அனுப்பியிருந்தான். இதுக்கு என்ன சார் செய்யப் போறீங்க?"

மார்புகள் விம்ம ஆவேசமாகப் பேசிய நிவிதாவை அமைதியாகப் பார்த்த ஷியாம், "கொஞ்சம் பொறுமையா இருங்க. இன்னார்னு சொன்னா ஒழுங்கு நடவடிக்கை எடுக்கலாம். அது தெரியாம..." என்று இழுத்தான்.

"அது யாருன்னு என்னால கண்டுபிடிக்க முடியும்" என்றாள் உறுதியாய் நிவிதா.

ஷியாம்குமார் மனத்தில் மிக லேசாக ஓர் அதிர்ச்சிக் கீறல் விழுந்தது. கர்சீப் எடுத்து உதடுகளை ஒற்றிக் கொண்டு, "எப்படி?" என்றான். 'அத்தனை கில்லாடியா நீ. அதையும் பார்க்கலாமே' என்றான் மனத்தில்.

(தொடரும்)

# பாதிப்பு

**தா**ன் சொல்வது சர்வநிச்சயமாய்ச் சரி என்கிற தீர்மானத்தோடு சுபாஷிணி உட்கார்ந்திருந்தாள். ஆசிரியர் குழுவினர் அந்தக் கதையைப் பிரசுரிப்பதா, வேண்டாமா என்கிற சந்தேகத்தில் இருந்தார்கள். மாதவன் சொல்வது சரியா, சுபாஷிணி சொல்வது சரியா என்கிற சந்தேகம்.

மாதவன், வாகதேவன் என்பவர் அனுப்பியிருந்த கதையைத் திரும்பவும் வாசித்தான். இதை நிச்சயமாய்ப் பிரசுரிக்க முடியாது. கதை நன்றாகவே உள்ளது. ஆனால் வேறொரு பிரபல எழுத்தாளரான பாவாணனின் பாதிப்பு இந்த எழுத்துக்களில் இருப்பது நிஜம். தனித்துவம் இல்லாத எழுத்துக்களைப் பிரசுரிப்பது நல்லதில்லை.

ஆசிரியர் சபாபதி சந்தேகமாய் அவனைப் பார்த்தார்.

''என்ன மாதவன்... சுபாஷிணி சொல்ற மாதிரி கதையை அடுத்த வாரம் போடத் தேர்ந்தெடுக்கலாமா?''

''வேணாம்.''

சுபாஷிணி அவன் பக்கமாய்த் திரும்பி ஒரு முறை தீர்க்கமாய் அவனைப் பார்த்தாள். 'தீர்விதா' பத்திரிகையில் மாதவன் நிருபராய்ச் சேர்ந்ததிலிருந்தே நல்ல தோழி.

''மாதவன்... பாதிப்புங்கிறது மேக்—கப் மாதிரி. அதையும் மீறி நிச்சயமா ஒரு தனித் தன்மை இருக்கும். இந்தக் கதைல அது இருக்குது.''

''மேலோட்டமா வாசிக்கும் சாதாரண வாசகர்களுக்கு அந்த பாதிப்புத்தான் கண்ணுல படும். அடித்தளம் தெரியாது.''

''சிந்தனையிலும் பாதிப்பு இருந்தாச் சரின்னு ஒதுக்கிடலாம். இந்தக் கதைல நடையில மட்டும் தான் சில இடங்கள்ல இருக்குது. சிந்தனைல தனித்துவம் இருக்குது. இவ்வளவு எதுக்கு? இந்த வாகதேவனோட எழுத்தைப் பாதிச்சிருக்கிற பாவாணனே வேறோர் எழுத்தாளரோட பாதிப்புத் தானே!''

மாதவன் சுபாஷிணியை ஆழமாய்ப் பார்த்தான். ''நீங்க சொல்றதெல்லாம் நிஜம்தான். இல்லேனு சொல்லலே, ஆனா... நான் அந்தத் தப்பைச் செய்யச் சம்மதிக்க மாட்டேன். தனித்துவம் இல்லாத எதுவுமே அங்கீகரிக்கப்படக் கூடாது.''

''யோசிச்சுப் பாருங்க மாதவன்... வாகதேவன் பாவாணனோட பாதிப்புங்கிறதுனால இந்தக் கதையை நிராகரிக்கிறீங்க. அந்தப் பாவாணனே இன்னொரு எழுத்தாளரோட பாதிப்புத்தான்கிற நிலைல. இதே மாதிரி பாவாணன் எழுத்தையும் அவர் முன்னுக்கு வர்ற சமயம் யாராவது சொல்லியிருந்தாங்கன்னா... இன்னிக்கி நமக்குப் பாவாணன்ங்கிற அருமையான படைப்பாளி கிடைச்சிருக்க மாட்டார்...''

ஆசிரியர் குழுவின் அத்தனை பேரும் மாதவனைப் பார்த்தார்கள். 'சீக்கிரம் முடிவைச் சொல்' என்கிற அவசரம் தெரிந்தது. மாதவன் பதில் சொல்லாமல் மறுபடியும் அந்தக் கதையைப் புரட்டினான்.

''சிந்தனை தான் முக்கியம் மாதவன். நடை இல்லே. அப்கோர்ஸ்... நடையும் முக்கியம் தான். ஆனால் நடைங்கிறது கதைக்கு உடம்பு மாதிரி. ஆன்மா இல்லே. உடல் அழிஞ்சு போயிடும் மாதவன். ஆன்மா சாகாது. சிந்தனைங்கிறது ஆன்மா மாதிரி.''

''இந்தக் கதைல தனிச் சிந்தனை இருக்குதுங்கிறதை ஒத்துக்கிறேன். ஆனா...''

''நடைல இல்லேங்கிறீங்க. நானும் ஒத்துக்கிறேன் மாதவன். ஆனா... சில சமயம் நம்மை நாம் வெளிப்படுத்துற நேரத்துல 'ஷேக்ஸ்பியர் சொன்னார். கம்பர் சொன்னார்'னு ஏன் மேற்கோள் காட்டுறோம்? நீங்க சொல்ற மாதிரி பார்த்தா அதுவும் பாதிப்புத் தானே?''

ஆசிரியர் சபாபதி மணிக்கட்டை உயர்த்தி மணியைப் பார்த்தார். ஆபீஸ் முடியும் நேரத்தைக் கடந்திருந்தது.

''ஓ. கே... நாளைக்குத் தீர்மானமா முடிவு எடுக்கலாம். நேரமாயிடுச்சு.''

கை குலுக்கிக் கொண்டு கலைந்தார்கள். மாதவன் ஸ்கூட்டர் சாவியை எடுக்க உள்ளே போனான். பின்னால் கொலுசுச் சத்தம் கேட்கத் திரும்பிப் பார்த்தான். நான்கடி தள்ளி சுபாஷிணி நின்றிருந்தாள்.

''என்ன சுபா... விட்டே கொடுக்க மாட்டேங்கிறீங்க?''

''என்னால நிச்சயமா விட்டுக் கொடுக்க

**தமயந்தி**

முடியாது மாதவன். ஒரு நல்ல படைப்பாளியை விட்டுக் கொடுக்க முடியாது.''

''என்னால அதை ஒத்துக்க முடியாது சுபா.''

சுபாஷிணி பெருமூச்சு விட்டாள். எதற்காக மனத்திற்குக் கடிவாளம் கட்டிக் கொண்டு பாதையைப் பார்க்கிறான்?

அவன் தன் நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்தான். 'கிரீச்' என்று சின்னதாய் அது முனகியது.

மாதவன் கைகளை இறுக்கமாய்க் கோத்துக் கொண்டான். தனித் தன்மை இல்லாத எழுத்துக்காக இவள் ஏன் சிபாரிசு செய்கிறாள்?

''ஒவ்வொருத்தரும் சினிமாப் பார்த்திட்டு 'கமல் ஸ்டைல், ரஜினி ஸ்டைல்'னு முடி வெட்டிக்கிறாங்களே. அவங்களெல்லாம் கமல் ரஜினியாவா ஆயிடுறாங்க?''

''அபத்தமான ஆர்கியூமெண்ட்.''

''இல்ல மாதவன்... இது எல்லோருக்கும் உள்ள பாதிப்பு. ஸ்ரீதேவி மாதிரி எத்தனை பெண்கள் தலை சீவுறாங்க... தெரியுமா?''

மாதவனுக்கு சுமதி ஞாபகம் வந்தாள். நான்கு வருடங்களுக்கு முன்னால் ஒரு பேட்டிக்காகச் சந்தித்த போது வெகுளித்தனமாய்ப் பேசினாள். சின்னக் குழந்தை மாதிரி 'ஐஸ்க்ரீம் வேணும். ஸ்ரீதேவி படம் பிடிக்கும்' என்றாள். அந்த வெகுளித்தனத்தில் மாதவன் மயங்கிப் போய்ப் பிறகு அடிக்கடி அவளைச் சந்தித்தான்.

அம்மாவிடம் சொல்லி, கல்யாணத்தை வருகிற ஏப்ரலில் வைத்துக் கொள்ளச் சம்மதம் வாங்கினான். அதற்கு முன் அம்மா கட்டளை போட்டாள். ''எந்தக் காரணத்தைக் கொண்டும் கல்யாணத்துக்கு முன்னால் சுமதியைப் பார்க்கக் கூடாது.''

அதை ஒத்துக் கொள்ள மனம் தவித்தது. திருட்டுத்தனமாய் சுமதியைச் சந்தித்தான். அவள் பஸ் ஸ்டாப்பிற்குப் போய்க் காலையில் அவளை ஏற்றிக் கொண்டு ஆபீசில் விட்டான். சாயங்காலம் இவன் ஆபீஸ் முன்னால் அவள் காத்திருப்பாள்.

மாதவன் மணியைப் பார்த்தான். ஐந்தரை. சுமதி ஆறு மணிக்குக் காத்திருப்பதாய்க் காலையில் சொன்னான்.

தன் முன்னால் உட்கார்ந்திருக்கும் சுபாஷிணியை மாதவன் கூர்ந்து பார்த்தான். நடுவகிடு எடுத்து முடியைப் பாதிக்கு மேல் பிரித்து அடியில் விரித்து விட்டிருந்தாள். கண்களுக்கு அடியில் மெல்லிசாய் ஒரு சின்ன மைக் கோடு. தலையில் ஒற்றை ரோஜா.

அவனை எப்படியும் சம்மதிக்க வைத்து விட வேண்டும் என்று சுபாஷிணி உட்கார்ந்திருந்தாள்.

''சரி... சினிமாவை விடுங்க. பக்கத்து வீட்டில் புளிக்குழம்பு நல்லா வச்சாங்கனா 'எப்படி வச்சீங்க'னு கேக்கத் தோணுது. இது என்ன மாதவன்? பாதிப்புத் தானே.. போகப் போக அவங்களை விட நாம் நல்லாக் கூட வைப்போம்.''

''நீங்க என்னதான் சொன்னாலும் தனித் தன்மை இல்லாத எழுத்தைப் பிரசுரிக்க என்னால் சம்மதிக்க முடியாது.''

''எதுக்காக இப்படி மனசை ஒத்தைக் கால்ல நிக்க விடுறீங்க மாதவன்? பாதிப்



பில்லாம எழுதறது நல்லதுதான். ரொம்ப நல்லது — ஆனு... அது சுத்தமில்லே மாதவன். நிராகரிக்கிற அளவுக்குத் தண்டனை கொடுக்கக் கூடிய தப்பில்லே.''

மாதவன் சடாரென்று நிமிர்ந்தான். கண்களில் கோபம் தெரிந்தது.

''இந்த வாசுதேவன் உங்களுக்குச் சொந்தக்காரரா சுபா?''

ஆவேசம் அலே அடிக்க, சுபா கண்களை மூடி அடிபட்ட காயத்தை மறைக்க முயன்ருள்.

''என்றைக்காவது ஒரு நாள் நான் அப்படி சிபாரிசுக்காக உங்ககிட்டேயோ... ஆசிரியர் கிட்டேயோ 'போனேன்னு' உங்களால் சொல்ல முடியுமா மாதவன்.''

''ஐ யாம் ஸாரி சுபா...''

சுபாஷிணி பதில் பேசாமல் தோளைக் குலுக்கிக் கொண்டு எழுந்தாள். மௌனம் நடுவில் நடந்து வர சுபாஷிணியும் மாதவனும் வெளியே வந்தார்கள். தூரத்தில் சுமதி காத்திருப்பது தெரிந்தது.

சுபாஷிணி சுமதியைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

''எப்படி இருக்கிறீங்க சுமதி?''

''நல்லாயிருக்கேன்.''

சுபாஷிணி போனதும் சுமதி கோபமாய் வேறு திசையில் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''இப்ப மணி என்ன தெரியுமா? ஆறே கால்.''

''பதினைஞ்சு நிமிஷம் லேட்டாயிடுச்சு. அதுக்குப் போய் ஏன் கோபப்படுறே? ஒரு முக்கியமான விஷயத்தைச் சுபாவோட பேச வேண்டியிருந்திச்சு.''

''ஆபீஸ்ல எல்லோரும் போன பிறகா?''

''ஏன் சுமதி அசிங்கமாக் கற்பனை பண்ணிக்கிறே?''

''அசிங்கமாவா? நானு? சேச்சே... அவ என்னை விட அழகு. உங்க காத்து அவள் பக்கம் திரும்பியிருக்குது.''

அலுத்துப் போய் வருகிறவனிடம் பேசுகிற தொனி எரிச்சல் படுத்திற்று. கைக்குட்டையை வைத்து மாதவன் முகத்தை அழுத்தித் துடைத்தான்.

''போவோமா?''

''அவ அழகுனு தானே... அவ பக்கம் போறீங்க?''

''ஷட் அப் சுமதி. கற்பனை வளம் உனக்கு ஜாஸ்தியா இருக்குது.''

''இருந்து என்ன புண்ணியம்? நான் அவ அளவுக்கு அழகா இல்லையே...''

''ஆமா... அவ அழகுதான். உன்னை விட அழகுதான். இப்ப என்ன? ஸ்கூட்டர்ல ஏறு.''

சுமதி கோபமாய் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். கண்ணில் நீர் கட்டியிருந்தது.

''வேணும். நான் பஸ்ல போயிக்கிறேன்.''

சட்டென்று குரல் கம்மச் சொல்லி விட்டு பஸ்—ஸ்டாண்டுக்கு நடந்தாள்.



''ஆனாலும் அந்தப் பல் டாக்டர் ரொம்ப மோசம்!''

''ஏன் அப்படிச் சொல்றே?''

''சொத்தைப் பல்லைப் பிடுங்கறதுக்கு முன்பு ட்ரயல் பார்க்கிறேன்னு ஒரு நல்ல பல்லையும் பிடுங்கிட்டார்!''

— சேலை. அ. கதிர்வேல்.

**ரா**த்திரி முழுக்கத் தூங்க முடியவில்லை என்ன அசட்டுத்தனமான சண்டை? சுமதி குழந்தை. முதிர்ச்சி கிடையாது. அவளைப் புரிந்து கொள்ளாமல் கத்தியது தப்பு. அந்தக் குழந்தை — ஒரு பெண்ணும் ஆணும் பேசினால் தப்பு — என்று நினைப்பது இயற்கை.

காலையில் மாதவன் நேராய்ச் சுமதி வீட்டுக்குப் போனான். மகிழ்ந்து போய் அவள் அப்பா தடுமாறினார். தன் பெண்ணை ஆபீஸில் கொண்டு விட மாப்பிள்ளை வீட்டுக்கே வந்திருக்கிறார் என்கிற சந்தோஷம். அடுத்த தடவை அம்மாவைப் பார்க்கும் போது சொல்வார். அம்மா கோபப்படுவாள். அதை விடப் பெரிசு — சுமதியின் கோபத்தைத் தீர்ப்பது.

உள்ளறையிலிருந்து சேலையைச் சரி செய்து கொண்டே வெளியே வந்தவள் மாதவனைப் பார்த்ததும் தடுமாறி நின்றாள்.

''தம்பி வந்திருக்கார் சுமதி. அவர் கூட ஆபீஸ் போயிடு.''

தினமும் வீட்டுக்குத் தெரியாமல் பஸ் ஸ்டாண்டில் ஏற்றிக் கொண்டு போவது அப்பாவுக்குத் தெரியாது. சுமதி நெஞ்சுக்குள் பொங்கிய சிரிப்பை அடக்கிக் கொண்டாள். நேற்று மாதவன் மேல் இருந்த கோபம் குறைந்தாற் போலிருந்தது.

''போவோமா?''

சிவப்புச் சேலையில் பளிச்சென்று சிரித்துக் கொண்டு நின்றவளை மாதவன் நிமிர்ந்து பார்த்தான். சுபாஷிணியைப் போலவே நடு வகிடு எடுத்து முடியைப் பிரித்து அடியில் விரித்துப் போட்டிருந்தாள். கண்களுக்கு அடியில் மெல்லிசாய்ச் சுபாஷிணியைப் போலவே மை. தலையில் ஒற்றை ரோஜா ஒற்றை இலையோடு — சுபாஷிணியை விட அழகாக இருந்தாள்.

'பக்கத்து வீட்டில் புளிக்குழம்பு நல்லா வச்சாங்கனு 'எப்படி வச்சீங்க'னு கேக்கத் தோணும். இது என்ன மாதவன்? பாதிப்புத் தான். போகப் போக அவங்களை விட நாம நல்லாக் கூட வைப்போம்.'

கடவுளே...! இது தான் சுபாஷிணி சொன்ன பாதிப்பா? மனுஷ பாதிப்பா?

ஸ்கூட்டரில் ஏறிக் கொண்ட போது சுமதி பின்புறமாய்க் கிசுகிசுத்தாள்.

''இனிமே... அந்தச் சுபாவோட பழகாதீங்க மாதவன்... என்னால தாங்கிக்க முடியாது.. அவ என்னை விட அழகுதான்னு

வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்.

அவர் பேச்சில்தன்னம்பிக்கை தொனிக்கும் — இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றி வாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப் பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, தும்பின் அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுப்பயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.

செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன: யூரோக்ளீன் —அனைத்துப்பயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்யூம் க்ளீனரை விட சிறந்தது—மற்றும் அக்வாகார்ட் — நீர் பைப்பிலேயே பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபயர்.

யூரோக்ளீன் — உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்று விடும். அக்வாகார்ட் —ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால், கிருமிகள் அற்ற பாதுகாப்பான, சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.

உங்கள் குடும்பத்திற்கு, சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும் சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள் வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள், அல்லது இம் முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ், பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.

# யூரோக்ளீன்

அனைத்துப்பயோக சுத்தம் செய்யும் சாதனம் — வேக்யூம் க்ளீனரை விட சிறந்தது.

# அக்வாகார்ட்

நீர் பைப்பில் பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபயர்.

# யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்

நவீன முறை சுத்தம் சுகாதாரத்தின் முன்னோடிகள்.

யூரோக்ளீன் சேல்ஸ் மற்றும் சர்வீஸ் சென்டர்களின் முகவரிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. நட்சத்திரக் குறியிட்ட இடங்களில் அக்வா கார்டும் கிடைக்கிறது.

யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்
தலைமை அலுவலகம்
ஃபோர்ப்ஸ் பில்டிங், 4 வது மாடி,
சரண்ஜித்ராய் மார்க், ஃபோர்ட், பம்பாய்-400 001
ஃபோன்: 2044695/3266.

**பம்பாய்**

* 1. க்ரிஸ்டல், 4 வது மாடி, 79, டா. அன்னிபெஸண்ட் ரோடு, வொர்லி. ஃபோன்: 4935175/7126.

* 2. D-16, காமர்ஸ் சென்டர், தார்தேவ் மெயின் ரோடு. ஃபோன்: 4949183/6184.

* 3. B-3, ஜெஃப்பி ஹோம் அபார்ட்மெண்ட்ஸ், 1 வது மாடி, 66, வுட்ஹவுஸ் ரோடு, கொலாபா. ஃபோன்: 217458/217430.

* 4. 71, நாகர், 2 வது மாடி, ஜெஹங்கீர் ஃபேக்டரி எதிரே, எல்.பி.எஸ். மார்க், முலுண்ட் (மேற்கு) ஃபோன்: 5601082/5619148

**கல்கத்தா**

* 5. 7, சக்ரபேரியாரோடு. (தெற்கு). ஃபோன்: 477954

* 6. 177, ராஜா திநேந்திரா சாலை, போலீஸ் ஸ்டேஷன். உல்டாடங்கா. ஃபோன்: 555023.

**டில்லி**

* 7. 402, அர்ச்சனா கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ், கிரேட்டர் கைலாஷ் பார்ட் 1, ஃபோன்: 6416143.

* 8. 12/4, அஸஃப் அலி ரோடு, மித்தல் பில்டிங். ஃபோன்: 278055/270523.

* 9. M/37, கிரேட்டர் கைலாஷ் II மார்க்கெட். ஃபோன்: 6449727/6433627.

* 10. 203/204 துருவ தரவுஸ், பதம் சிங் ரோடு, கரோல் பாக். ஃபோன்: 566268/5717722

**சென்னை**

* 11. 733, அண்ணா சாலை, 2 வது மாடி. ஃபோன்: 89846/811413.

* 12. சன்ட் கோல்ட் சேம்பர்ஸ், 2 வது மாடி, 92/ஜி.என். செட்டி ரோடு, தி. நகர். ஃபோன்: 446610/17.

**பெங்களூர்**

* 13. ஃபராஹ் கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ், 68, ஜெ.ஸி. ரோடு. ஃபோன்: 224453/225673.

* 14. 4305, ஷஹ பாயிண்ட்-4, 3 வது மாடி, 45, பாலஸ் ரோடு.

**கோயம்புத்தூர்**

* 15. எண். 61, மேற்கு, டி.வி. சாமி ரோடு, ஆர்.எஸ். புரம்.

**ஹைதராபாத்**

* 16. 403, கலா பேலஸ், சரோஜினி தேவி ரோடு, செகந்திராபாத். ஃபோன்: 824126.

**மதுரை**

* 17. 290, கே. கே. நகர் ஃபோன்: 45328.

**சேலம்**

* 18. 37, சாரதா காலேஜ் ரோடு.

**திருச்சிராப்பள்ளி**

* 19. 29 A, வடக்கு பாண்டியன் தெரு, உறையூர்.

**திருவனந்தபுரம்**

* 20. T.C. எண், 42/66, பங்கஜா பவன், கலிபங்குளம் தெரு, மணக்காடு. ஃபோன்: 79570.

87/EFL/470 tm

**வாசகர் பங்கு:**



# தளபதி இடமதி

## பரிசு ரூ. 400/-

மாறிவரும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப அரசியல் சமுதாயப் பிரச்னைகளை வைத்து நமது ஆஸ்தான ஜோக்கர் அடிக்கடி 'விட்' அடிப்பார். என்ன சொல்வார் என்பதைத்தான் கீழே கூப்பனில் நீங்கள் எழுதி அனுப்ப வேண்டும். அறிவுக் கொழுந்தான கருத்து மேடைப் பேச்சாகவோ உரையாடலாகவோ வெளிப்படலாம். முதல் முறையாக உங்கள் துணுக்கு இடம்பெறும் போது பரிசு ரூ. 25/-. ஒருவரே எழுதிய துணுக்குகள் மீண்டும் மீண்டும் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் பரிசு இரட்டிப்பாகி வரும். அதிகபட்சம் ரூ. 400/- பரிசு கிடைக்கும். உறை மீது மறவாமல் ''தளபதி இடமதி'' என்று குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி இதழ் 21.2.88 — முடிவு தேதி: 1.3.88.

தளபதி இடமதி: ''.................

.................................

.................................

.................................

.................................

.................................

.................................

.................................

.................................

.................................

.................................''

என் பெயர்:.......................

விலாசம்:.........................

.................................

சொன்னதும் என்னால ராத்திரி முழுக்கத் தூங்க முடியலே. ஏன், எப்படினு யோசனே. இன்னிக்கி அரை மணி நேரம் கண்ணாடி முன்னால் நின்னேன். இன்னிக்கி நான் அழகா இருக்கிறேனா மாதூ...''

''உம்..

''சுபாவை விட..?''

''உம்.''

சுமதியை அவள் ஆபீஸில் இறக்கி விட்டு விட்டு ஆபீஸுக்குள் நுழைந்த போது மனம் கலங்கியிருந்தது. சுபாஷிணி அவனைப் பார்த்ததும் சிரித்தாள்.

''குட்மார்னிங் மாதவன்.''

''மார்னிங்..''

அவளுடன் சரியாய்ப் பேச முடியாமல் இக்கிற்று. சுமதி நெஞ்சுக்குள் எட்டிப் பார்த்து, 'அந்தச் சுபாவோட பழகாதீங்க மாதவன்' என்றாள்.

இது... இது சுமதியால் ஏற்பட்ட பாதிப்பா? சுபாஷிணியால் சுமதி பாதிக்கப் பட்டிருக்கிறாள். நான் சுமதியால் பாதிக்கப் பட்டிருக்கிறேன். இது 'நெகட்டிவ்' பாதிப்பு. சரியான நோக்கம் இதற்கில்லை. பொறாமை தான் காரணம்.

சுபாஷிணியோடு பேச எனக்கு விருப்ப மில்லாமல் இல்லை ஆனால்... சுபாஷிணி யோடு பேசினால் சுமதிக்குப் பிடிக்காது. சுபாஷிணி பெரிசா? சுமதியா? சுமதிதான். வாழ்க்கைப் பயணத்தில் கூட வரப் போகிற வள் அவள். அவளைப் புண்படுத்த முடி யாது. ஒதுக்கக் கூடாது. 'சுபாவோடு பழக வேண்டும்' என்கிற என்னுடைய தனித் தன்மையை அழித்துவிட்டு — சுமதிக்காக சுபாஷிணியிடம் இடைவெளி விட்டுப் பழக வேண்டும்.

ஆசிரியர் குழு கூடியதும் சபாபதி மாத வனைக் கேள்விக் குறியோடு பார்த்தார்.

''என்ன முடிவு மாதவன்?''

மாதவனைப் பார்வைகள் சூழ்ந்தன. சுபா ஷிணியிடம் நேற்றுச் சாயங்காலம் சொன் னது ஞாபகம் வந்தது.

பாதிப்புங்கிறதே ஒரு விதமான கோழைத்தனம்.

மாதவன் கண்களை இறுக மூடிக் கொண் டான்.

வாசுதேவனுடைய பாதிப்பு தன்னைப் போல் நெகட்டிவ் பாதிப்பா?

'அதே மாதிரி இந்த வாசுதேவனோட எழுத்தும் வளரலாம். ஏன் பாவாணனைவிட நாகரிகமான நடையாகவும் ஆகலாம்'

இது வளர்ச்சியோடு கூடிய பாதிப்பு.

சுபாஷிணியோடு பேச முடியாமல் தவிக் கிற மாதிரி சுமதியால் ஏற்பட்ட பாதிப்பு இல்லை வாசுதேவனுடையது வளர்ச்சி. இது வளர்ச்சியில்லை தேக்கம். ஒரு மனித உறவு தேக்கம் அடையப் போகிறது.

''என்ன மாதவன்... நிராகரிப்பா?''

''இல்லை ஸார். அதைத் தேர்ந்தெடுத்திட லாம்.''

சுபாஷிணி சந்தோஷமாய் அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

# பொன்னியின் செல்வன்



## அத்தியாயம் 48
## 'கலபதி'யின் மரணம்



திரை மீது வந்த பெண்மணி யார் என்பது இளவரசருக்கு உடனே தெரிந்து போயிற்று. குதிரை நின்ற இடத்தை நோக்கி அவர் விரைந்து சென்றார். அவருடன் பூங்குழலியும் போனாள். மற்றவர்களும் சற்றுத் தூரத்தில் தயங்கித் தயங்கிப் போனார்கள்.

ஊமை ராணி அதற்குள் குதிரையிலிருந்து இறங்கி விட்டாள். பின்னால் கூட்டமாக வந்தவர்களைச் சற்றுக் கவலையுடன் பார்த்து விட்டுப் பூங்குழலியிடம் சமிக்ஞை பாஷையில் ஏதோ சொன்னாள். ''பெரியம்மா காட்டில் ஏதோ அதிசயத்தைப் பார்த்திருக்கிறாள். அந்த இடத்துக்கு நம்மை வரும்படி அழைக்கிறாள்!'' என்றாள். இளவரசர் அக்கணமே போவதென்று தீர்மானித்து விட்டார். மற்றவர்களும் தம்முடன் வரலாமா என்று கேட்கச் சொன்னார். ஊமை ராணி சிறிது யோசித்து விட்டு, சம்மதத்துக்கு அறிகுறியாகத் தலையை அசைத்தாள்.

போகும்போது எல்லோரும் அவள் ஏறிவந்த குதிரையைப்பற்றியேபேசிக் கொண்டு போனார்கள். அது அரபு நாட்டிலிருந்து வந்த அற்புதமான உயர் ஜாதிக் குதிரை. இந்த மூதாட்டிக்கு எப்படிக் கிடைத்தது? சமீப காலத்தில் இந்தப் பிரதேசத்தில் சைன்யம் எதுவும் வந்து இறங்கவில்லை; போர் ஒன்றும் நடக்கவில்லை. அப்படியிருக்கும் போது இக்குதிரை இந்தப் பெண்மணிக்கு எப்படிக் கிடைத்திருக்க முடியும்?



ண்டைமானாற்றின் முகத்துவாரத்தின் அருகில் சோழ நாட்டுக் கப்பல் ஒன்று கரை தட்டிப் புதைந்திருந்ததைப் பார்த்தோம். அங்கிருந்து சிறிது தூரம் வரையில் இலங்

அமரர் கல்கி

கைத் தீவின் கரை தென்கிழக்குத் திசையாக வளைந்து நெளிந்து சென்றது. அடிக்கடி கடல் நீர் பூமிக்குள் புகுந்து சிறிய நீர் நிலைகளையும் பெரிய நீர் நிலைகளையும் உண்டாக்கியிருந்தது. இத்தகைய வளைகுடா ஒன்றுக்குள்ளிருந்துதான் வந்தியத்தேவன் முதலியவர்கள் அன்று காலையில் பார்த்த கப்பல் வெளியே வந்து கடலில் சென்றது.

இப்போது ஊமை ராணி தென் கிழக்குத் திசையிலே அவர்களை அழைத்துக் கொண்டு சென்றாள். அடர்ந்தகாட்டுக்குள்ளேபுகுந்துசென்றாள். போகப் போக, இளவரசரின் ஆர்வம் அதிகமாயிற்று. ஏதோ ஒரு முக்கியமான சம்பவம் நடந்திருக்க வேண்டும்; இல்லாவிட்டால் இவ்வளவு தூரம் நம்மை இம்மூதாட்டி அழைத்துப் போக மாட்டாள் என்று எண்ணினார். திடீரென்று அச்சம்பவம் அவர்களுடைய கண் முன்னால் வந்து நின்றது!

காட்டில் சிறிது இடைவெளி ஏற்பட்டதும் நீர் நிலை ஒன்று தெரிந்தது. அதன் கரையில் மனிதர்கள் சிலர் இறந்து கிடந்தார்கள். பிணங்களின் நாற்றத்தோடு காய்ந்து போன மனித இரத்தத்தின் நாற்றமும் கலந்து வந்தது. எத்தனையோ போர்க்களங்களின் அனுபவம் பெற்ற அந்த மனிதர்களுக்கு உயிரில்லா மனித உடல்களும் காய்ந்த இரத்தமும் புதிய அனுபவங்கள் அல்ல. எனினும், ஏதோ அதிசயமான, மர்ம பயங்கரமான, காரியம் இங்கே நடந்திருக்கிறது என்ற எண்ணம் எல்லாருடைய மனத்திலும் ஆர்வத்தோடு அருவருப்பையும் உண்டாக்கியது.

அருகிலே சென்று பார்த்தால் உயிரற்றுக் கிடந்த உடல்கள் எல்லாம் தமிழ்நாட்டு மாலுமிகளின் உடல்கள் என்று தெரிய வந்தது. "சீக்கிரம்! சீக்கிரம்! யாருக்காவது இன்னும் உயிர் இருக்கிறதா என்று பாருங்கள்!" என இளவரசர் கூவினார். அவருடன் வந்தவர்கள் ஒவ்வோர் உடலுக்கு அருகிலும் சென்று பரிசோதிக்கத் தொடங்கினார்கள்.

இளவரசரை ஊமை ராணி மறுபடியும் கையினால் சமிக்ஞை செய்து அழைத்துப் போனாள். உடல்கள் கிடந்த இடத்துக்குச் சிறிது தூரத்துக் கப்பால் இருந்த மரத்தடிக்கு அழைத்துப் போனாள். அந்த மரத்தடியில் ஒரு கோர ஸ்வரூபம் சாய்ந்து படுத்திருந்தது. படுத்திருந்தவன் மனிதன்தான். ஆனால் அதை நம்புவது கஷ்டமாயிருந்தது. உடம்பெல்லாம் காயங்கள். மண்டையில் பட்டிருந்த காயங்களிலிருந்து இரத்தம் முகத்தில் வழிந்து மிகப் பயங்கரமாகச் செய்திருந்தது. ஒவ்வொரு கணமும் மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அம்மனிதனுடைய முகத்தில் இளவரசரைக் கண்டதும் மலர்ச்சியின் சிறிய அறிகுறி தோன்றியது. அவன் வாய் திறந்து ஏதோ பேச முயன்றான். ஆனால் அவன் வாயிலும் இரத்தமாயிருந்தபடியால் அவனுடைய முகத்தின் கோரம் அதிகமாயிற்று.

இளவரசர் பரபரப்புடன் அவன் அருகில் போய் உட்கார்ந்தார். "சீக்கிரம் தண்ணீர் கொண்டு வாருங்கள்!" என்று கத்தினார்.

அம்மனிதன், "வேண்டாம் இளவரசே! சற்று முன்னால்தான் இந்தப் பெண்மணி தண்ணீர் கொடுத்தாள். அவள் அச்சமயம் வராதிருந்தால் இதற்குள் என் உயிர் பிரிந்திருக்கும். ஐயா! தங்களுக்குத் துரோகம் செய்ய வந்ததின் பலனை இங்கேயே அனுபவித்து விட்டேன். மறுஉலகில் இதற்காக மறுபடியும் கடவுள் என்னைத் தண்டிக்க மாட்டார்" என்றான்.

இளவரசர் அவன் குரலைக் கேட்டதும் முகத்தை உற்றுப் பார்த்தார், "ஆ! கலபதி!* இது என்ன பேச்சு! இதெல்லாம் எப்படி நடந்தது? எனக்கு நீர் என்ன துரோகம் செய்வதற்காக வந்தீர்? அதை நான் நம்பவே முடியாது!" என்றார்.

"ஐயா! தங்கள் உத்தம குணத்தினால் அப்படிச் சொல்கிறீர்கள். பழுவேட்டரையர்களின் சொற்படி தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு போக வந்தேன். இதோ கட்டளை!" என்று சொல்லி, மடியிலிருந்து ஓலை ஒன்றை எடுத்துக் கொடுத்தான், சாகுந்

* அந்நாளில் சேனைத் தலைவனைத் 'தளபதி' என்று அழைத்தது போல், மரக்கலத் தலைவனைக் 'கலபதி' என்று அழைத்தார்கள்.

தறுவாயில் இருந்த கலபதி.

ஓலையைக் கண்ணோட்டமாக இளவரசர் ஒரு வினாடியில் பார்வையிட்டார். "இதில் உமது துரோகம் என்ன? சக்கரவர்த்தியின் கட்டளையைத்தானே நிறைவேற்ற வந்தீர்? அதையறிந்து நானே விரைந்து ஓடி வந்தேன். அதற்குள் இந்தவிபரீதங்கள் எப்படி நேர்ந்தன? சீக்கிரம் சொல்லுங்கள்!" என்றார்.

"சீக்கிரம் சொல்லத்தான் வேண்டும். இல்லாவிட்டால் அப்புறம் சொல்லவே முடியாது!" என்றான் கலபதி. பிறகு அவன் அடிக்கடி தட்டுத் தடுமாறிப் பின்வரும் வரலாற்றைக் கூறினான் :—

சக்கரவர்த்தியின் கட்டளையைப் பெற்றுக் கொண்டு, கலபதி இரண்டு கப்பல்களுடன் நாகப்பட்டினத்திலிருந்து கிளம்பினான். அந்த வேலை அவனுக்குப் பிடிக்கவில்லைதான். ஆயினும் சக்கரவர்த்தியின் கட்டளையை மீற முடியாமல் புறப்பட்டான். புறப்படும்போது பழுவேட்டரையர்கள் அவனிடம் கண்டிப்பாகச் சில கட்டளைகளை இட்டிருந்தார்கள். அதாவது இலங்கையை அடைந்ததும் தனியான இடத்தில் கப்பல்களை நிறுத்திக் கொண்டு இளவரசர் எங்கே இருக்கிறார் என்று முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு அவரை நேரில் சந்தித்துச் சக்கரவர்த்தியின் ஓலையைக் கொடுக்க வேண்டும். அதற்கு முன்னால் சேநாதிபதி கொடும்பாளூர் வேளாருக்கு இந்தச் செய்தி தெரியக் கூடாது. இளவரசரிடம் கட்டளையைக் கொடுத்த பிறகு அவராக வந்தால்சரி, இல்லாவிட்டால்பலவந்தமாகச் சிறைப்படுத்தியாவதுகொண்டு வர வேண்டும்...... இவ்விதம் சொல்லித் தங்கள் அந்தரங்க ஆட்கள் சிலரையும் பழுவேட்டரையர்கள் கலபதியுடன் சேர்த்து அனுப்பினார்கள்.

கலபதி மனத்தில் பெரிய பாரத்துடனேயே புறப்பட்டு வந்தான். அவன் கீழிருந்த கப்பல் மாலுமிகளில் பலருக்கு எதற்காக இலங்கை போகிறோம் என்பது தெரிந்திருக்கவில்லை. இதனால் அவனுடைய மனவேதனை அதிகமாயிருந்தது. அவர்களிடம் எப்படிச் சொல்வது என்று தயங்கினான். கப்பல்களைத் தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தில் கொண்டு போய் நிறுத்திய பிறகு கலபதி இன்னும் சில மாலுமிகளோடு காங்கேசன் துறைக்குப் போனான். இளவரசர் அப்போது எங்கே இருக்கிறார் என்று விசாரித்து வருவதற்காகத்தான். தென்னிலங்கையின் உட்பகுதியில் இளவரசர் பிரயாணம் செய்து கொண்டிருப்பதாகக் காங்கேசன் துறையில் தெரிந்து கொண்டு திரும்பி வந்தான்.

கலபதி திரும்பி வருவதற்குள்ளே மாலுமிகளுக்கு விஷயம் தெரிந்து விட்டது. பழுவேட்டரையர்களின் அந்தரங்க ஆட்கள் சிலர் இருந்தார்கள் அல்லவா? அவர்கள் மூலம் பிரஸ்தாபம் ஆகிவிட்டது. கலபதி திரும்பி வந்ததும் மாலுமிகள் கூட்டமாகச் சேர்ந்து கொண்டு கலபதியிடம் கேட்டார்கள். "பொன்னியின் செல்வரைச் சிறைப்படுத்திக் கொண்டு போகவா நாம் வந்திருக்கிறோம்?" என்று வினவினார்கள். கலபதி உண்மையைக் கூறினான். "நாம் இராஜாங்க சேவையில் இருப்பவர்கள். சக்கரவர்த்தியின் கட்டளையை நிறைவேற்ற வேண்டியவர்கள்" என்றான். "எங்களால் அது முடியாது. இது சக்கரவர்த்தியின் கட்டளையும் அல்ல; பழுவேட்டரையர்களின் கட்டளை" என்றார்கள்.

"பின்னே நீங்கள் என்னதான் செய்யப் போகிறீர்கள்?" என்று கலபதி கேட்டான்.

"மாதோட்டம் சென்று இளவரசருடன் சேர்ந்து கொள்ளப் போகிறோம்."

"மாதோட்டத்தில் இளவரசர் இல்லையே?"

"இல்லாவிடில் சேநாபதி கொடும்பாளூர் வேளாரிடம் சரண் அடைவோம்."

கலபதி அவர்களுக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் பயனில்லை. கலபதியுடன் நிற்பதற்குப் பழுவேட்டரையர்களின் அந்தரங்க ஆட்கள் உள்படச் சுமார் பத்துப் பேர்தான் சம்மதித்தார்கள். பத்துப் பேரை வைத்துக் கொண்டு இருநூறு பேரை என்ன செய்ய முடியும்?

"சரி; அப்படியானால் இப்போதே போய்த் தொலையுங்கள்! பின்னால் வரு

கிறதையும் அனுபவித்துக் கொள்ளுங்கள்! என்னால் இயன்ற வரையில் என் கடமையை நான் செய்வேன்!'' என்றான் கலபதி.

மாலுமிகளில் பலர் இரண்டு கப்பல்களில் ஒன்றைச் செலுத்திக் கொண்டு மாதோட்டம் போகலாம் என்று உத்தேசித்தார்கள். மற்றும் சிலர் அதை ஆட்சேபித்தார்கள். ஆகவே கப்பலிலிருந்து இறங்கித் தரை மார்க்கமாகவே புறப்பட்டார்கள். புறப்படும் அவசரத்தில் அவர்கள் ஏறியிருந்த கப்பலுக்கு நங்கூரம் பாய்ச்சவில்லை. கப்பல் நகர்ந்து நகர்ந்து சென்று கரை தட்டி உடைந்து மண்ணில் புதைந்து விட்டது.



தற்குப் பிறகு கலபதி மற்றொரு கப்பலுடன் அங்கேயிருக்க விரும்பவில்லை. காங்கேசன் துறையில் அவன் ஒரு செய்தி கேள்விப்பட்டிருந்தான். சில நாட்களுக்கு முன்பு முல்லைத் தீவுக்குப் பக்கத்தில் அரபு நாட்டுக் கப்பல் ஒன்று உடைந்து முழுகிவிட்டதென்றும், அதிலிருந்து தப்பிப் பிழைத்த மூர்க்க அராபியர்கள் சிலர் அந்தப் பக்கத்தில் திரிந்து கொண்டிருந்ததாகவும் சொன்னார்கள். எனவே, கரை தட்டிப் புதைந்த கப்பலுக்குப் பக்கத்தில் இன்னொரு கப்பலையும் நிறுத்தி வைக்க அவன் விரும்பவில்லை. நன்றாயிருந்த கப்பலை அங்கிருந்து அப்புறப்படுத்திக் கொண்டு போனான். கடல் அடுத்தபடியாகப் பூமிக்குள் சென்றிருந்த குடாவில் கொண்டு போய் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தினான்.

பின்னர் கலபதி தன்னுடன் இருந்த மாலுமிகளுடன் கரையில் இறங்கி மேலே செய்ய வேண்டியதைப் பற்றி அவர்களிடம் கலந்து ஆலோசித்தான். அவன் மட்டும் தனியாகச் சென்று இளவரசரிடம் கட்டளையைச் சேர்ப்பிப்பதாகவும் அதுவரையில் மற்றவர்கள் கப்பலைப் பத்திரமாகப் பாதுகாத்து வர வேண்டும் என்றும் சொன்னான்.

மாலுமிகள் தங்கள் கவலைகளைக் கலபதியிடம் தெரிவித்துக் கொண்டார்கள். அவர்களுக்குக் கலபதி தைரியம் கூறிக் கொண்டிருக்கும்போதே மயிர்க்கூச்சு எடுக்கும்படியான பயங்கரக் கூச்சலைப் போட்டுக் கொண்டு சில மனிதர்கள் அவர்களைச் சூழ்ந்து கொண்டு தாக்கினார்கள். அவர்கள் அரபு நாட்டார் என்பது தெரிந்தது. தமிழ் மாலுமிகள் அச்சமயம் இந்தத் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. சண்டைக்கு ஆயத்தமாகவும் இருக்கவில்லை. கையில் கத்திகளும் வைத்திருக்கவில்லை. எனினும் தீரத்துடன் போராடினார்கள். போராடி எல்லாரும் உயிரை விட்டார்கள்.




''இளவரசே! நான் ஒருவன் மட்டும் மரண காயங்களுடன் ஓடி ஒளிந்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டேன். நடந்தது என்னவென்பதை யாருக்காவது சொல்ல வேண்டும் என்பதற்காகவே இதுவரையில் உயிரை வைத்துக் கொண்டிருந்தேன். இளவரசே! தங்களையே நேரில் பார்த்துச் சொல்லும்படியான பாக்கியம் எனக்குக் கிட்டிவிட்டது. தங்களுக்கு நான் துரோகம் செய்ய எண்ணியதற்குப் பலனையும் அனுபவித்து விட்டேன். பொன்னியின் செல்வரே என்னை மன்னித்து விடுங்கள்!'' என்றான் கலபதி.

''கடமையை ஆற்றிய கலபதியே! உம்மை எதற்காக நான் மன்னிக்க வேண்டும்? போர்க்களத்தில் உயிரை



விடும் வீரர்கள் அடையும் வீர சொர்க்கம் ஒன்று இருந்தால் அதற்கு நீரும் அவசியம் போய்ச் சேர்வீர்! சந்தேகம் இல்லை!'' என்று சொல்லி இளவரசர் அக்கலபதியின் தீயெனக் கொதித்த நெற்றியைத் தடவிக் கொடுத்தார்.

கலபதியின் கண்களிலிருந்து அப்போது பெருகிய கண்ணீர் அவன் முகத்தில் வழிந்திருந்த இரத்தத்தோடு கலந்தது.

மிக்க சிரமத்துடன் அவன் தன் கைகளைத் தூக்கி இளவரசரின் கரத்தைப் பிடித்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

இளவரசரின் கரம் கலபதியின் கண்ணீரால் நனைந்தது. அவருடைய கண்களிலும் கண்ணீர் துளித்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் கலபதியின் உயிர் அவன் உடலை விட்டுப் பிரிந்தது.

# அத்தியாயம் 49

## கப்பல் வேட்டை

கலபதியின் உடலையும் மாண்டு போன மற்ற மாலுமிகளின் உடல்களையும் சேர்த்து வைத்து உலர்ந்த மரக் கட்டைகளை அடுக்கித் தகனம் செய்தார்கள்.

தீமூட்டி எரியத் தொடங்கிய போது இளவரசர் முகத்தில் கண்ணீர் பெருகிக் கொண்டிருப்பதைச் சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி கவனித்தார்.

''ஐயா! இந்தப் பாதகர்களின் சாவுக்காகவா கண்ணீர் விடுகிறீர்கள்? தங்களைச் சிறைப்படுத்த வந்த துரோகிகளுக்குக் கடவுளே தக்க தண்டனை அளித்து விட்டார். தாங்கள் ஏன் வருந்த வேண்டும்?'' என்றார்.

''சேநாபதி! இவர்கள் துரோகிகள் அல்ல; இவர்களுடைய மரணத்துக்காகவும் நான் வருத்தப்படவில்லை. சோழ நாட்டுக்கு இவ்வளவு பொல்லாத காலம் வந்துவிட்டதே

என்று வருந்துகிறேன்'' என்றார்.

''பொல்லாத காலம் பழுவேட்டரையர்களுடனேயே வந்து விட்டது. இப்போது புதிதாக ஒன்றும் வரவில்லையே!''

''புதிதாகத்தான் வந்திருக்கிறது. கலபதியின் கட்டளையைக் கப்பல் மாலுமிகள் மீறுவது என்று வந்து விட்டால் அதைக் காட்டிலும் ஒரு ராஜ்யத்துக்குக் கேடு வேறு என்ன இருக்க முடியும்? சேநாபதி! இது ஒரு சிறிய அறிகுறிதான்! இதைப் போலவே சோழ ராஜ்யம் எங்கும் பிளவுகள் ஏற்படுமோ என்று அஞ்சுகிறேன்! அப்படி ஏற்பட்டால் விஜயாலய சோழர் அஸ்திவாரமிட்ட இந்த மகாராஜ்யம் சின்னாபின்னமாகி விடுமே! இந்தக் கேடு என்னாலேயா நேர வேண்டும்? மகாபாரதக் கதை கேட்டிருக்கிறேன். துரியோதனன் பிறந்த போது நரிகளும் ஓநாய்களும் பயங்கரமாக ஊளையிட்டன என்று பாரதம் சொல்லுகிறது. நான் பிறந்த போதும் அப்படி நரிகளும் ஓநாய்களும் பயங்கரமாக ஊளையிட்டிருக்க வேண்டும்!'' என்றார் இளவரசர்.

''ஐயா! தாங்கள் இந்த உலகில் ஜனித்த போது என்னென்ன நல்ல சகுனங்கள் ஏற்படலாமோ அவ்வளவும் ஏற்பட்டன. தங்கள் ஜாதகத்தைக் கணித்த சோதிடர்கள்...''

''போதும், சேநாபதி! போதும்! இந்தப் பேச்சைக் கேட்டுக் கேட்டு என் காது புளித்து விட்டது. என் ஜாதக விசேஷம் இருக்கட்டும். நாம் பிரிய வேண்டிய காலம் வந்துவிட்டது. சேநாதிபதி! தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். இந்தக் கப்பல்களிலிருந்து கலபதியின் கட்டளையை மீறிச் சென்ற மாலுமிகள் தங்களிடம் வந்தால் தாங்கள் அவர்களைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது. உடனே சிறைப்படுத்தி அவர்களைத் தஞ்சைக்கு அனுப்ப வேண்டும்.''

''இளவரசே! கலபதி கூறியதை மட்டுமே நாம் கேட்டோம். மாலுமிகளின் கட்சி என்னவென்று நாம் கேட்கவில்லை. ஒரு பக்கத்துப் பேச்சை மட்டும் கேட்டு எப்படித் தீர்மானிக்க முடியும்? அது நீதிக்கும் தர்மத்துக்கும் உகந்ததா? தாங்கள் என்னுடன் வாருங்கள். அந்த மாலுமிகள் வந்ததும் அவர்கள் சொல்வதையும் கேட்டு முடிவு செய்யுங்கள்...''

''ஐயா! அது சாத்தியமில்லை. தங்கள் உசிதம் போல் செய்யுங்கள். நான் இனி ஒரு கணமும் இங்கே தாமதிக்க முடியாது. உடனே புறப்பட வேண்டும். படகுக்காரன் எங்கே?'' என்று கேட்டார்.

''எங்கே புறப்பட வேண்டும், இளவரசே! படகுக்காரன் எதற்கு?''

''இதைப் பற்றித் தாங்கள் கேட்கவும் வேண்டுமா? வந்தியத்தேவனை ஏற்றிச் செல்லும் கப்பலுக்குத்தான் நானும் போக வேண்டும். அந்த வீராதி வீரன் எனக்காகவல்லவோ அராபியர் வசப்பட்ட கப்பலில் ஏறிப் பயங்கரமான அபாயத்துக்கு உள்ளாகியிருக்கிறான்? அவனை நான் கைவிட்டுவிடக் கூடுமா? ஏற்கெனவே நான் செய்துள்ள பாவங்கள் போதாதென்று சிநேகத் துரோகம் வேறு செய்ய வேண்டுமா?''

''ஐயா! தாங்கள் ஒரு பாவமும் நான் அறிந்து செய்ததில்லை. தாங்கள் சொன்னாலும் உலகம் ஒப்புக் கொள்ளாது. வந்தியத்தேவன் வெறும் முரடன். முன் யோசனை சிறிதும் இல்லாதவன். அவனாக வருவித்துக் கொண்ட அபாயத்துக்குத் தாங்கள் எப்படிப் பொறுப்பாக முடியும்? இதில் சிநேகத் துரோகம் என்ன? இளவரசே! எங்கிருந்தோ தெறிகெட்டு வந்த ஒரு வாலிபனைத் தங்கள் சிநேகிதன் என்று கொண்டாடுவதே எனக்குப் பிடிக்கவில்லை. சமநிலையில் உள்ளவர்கள் அல்லவோ சிநேகிதர்கள் ஆக முடியும்?''

''சேநாதிபதி! வீண் பேச்சில் காலங் கடத்த நான் விரும்பவில்லை. அவன் என் சிநேகிதன் இல்லா விட்டாலும் நன்றி என்பதாக ஒன்று இருக்கிறதல்லவா? வள்ளுவர் முதல் பெரியோர்கள் அனைவரும் சொல்லியிருக்கிறார்களே? 'சோழ குலத்தார் நன்றி மறவாதவர்கள்' என்ற புகழ் என்னால் கெட்டுப் போக விட மாட்டேன். இந்த நிமிடமே புறப்பட்டுச் சென்று அந்தக் கப்பலைத் தேடிப் பிடிப்பேன்.....''

''எப்படிப் புறப்படுவீர்கள், எங்கே தேடுவீர்கள், இளவரசே!''

''நீங்கள் வந்த படகில் ஏறிக் கொண்டு புறப்படுவேன்......''

''முயலை வைத்துக் கொண்டு புலி வேட்டையாட முடியுமா? ஆழ்கடலில் செல்லும் மரக்கலத்தை இச்சிறிய படகில் ஏறித் துரத்திப் பிடிக்க முடியுமா? பிடித்த பிறகுதான் என்ன செய்வீர்கள்?''

''படகில் ஏறிப் போவேன். படகு உடைந்தால் மரக்கட்டையைப் பிடித்து நீந்திக் கொண்டு போவேன். வந்தியத்தேவனை ஏற்றிச் செல்லும் கப்பல் ஏழு கடல்களுக்கு அப்பால் சென்றாலும் அதைத் துரத்திக் கொண்டு போய்ப் பிடிப்பேன். பிடித்த பிறகு என் நண்பனைக் காப்பாற்ற முடியாவிட்டால் நானும் அவனோடு உயிரையாவது விடுவேன்... படகுக்காரன் எங்கே?''

இவ்விதம் சொல்லிக் கொண்டே இளவரசர் நாலாபுறமும் திரும்பிப் பார்த்தார். படகுக்காரனுடன் ஒரு பக்கமாக நின்று பூங்குழலி பேசிக் கொண்டிருந்ததைக் கவனித்தார். அருகில் ஊமை மூதாட்டியும் நின்றாள். அவர்கள் இருந்த இடத்தை நோக்கி விரைந்து போனார்.

சமீபத்தில் சென்றதும் பூங்குழலி கண்ணில் நீர் ததும்ப அப்படகுக்காரனுடன் ஆத்திரமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தாள் என்று தெரிந்தது.

''ஆகா! இது என்ன? இன்னொரு உட்கலகமா?'' என்றார் இளவரசர்.

படகுக்காரன் திடீர் என்று இளவரசரின் காலில் விழுந்தான். ''இளவரசே! தெரியாமல் பாதகம் செய்து விட்டேன். பணத்தாசையால் செய்து விட்டேன். மன்னிக்க வேண்டும்!'' என்று கதறினான்.

''இது என்ன?...... பூங்குழலி! எல்லாருமாகச் சேர்ந்து என்னைப் பைத்தியமாக்கி விடுவார்கள் போலிருக்கிறதே? நீயாவது விஷயம் என்னவென்று சொல்லக் கூடாதா?''

''இளவரசே! இத்தனை நேரம் சொல்ல வெட்கப்பட்டுக் கொண்டு சொல்லவில்லை. இவன் என் தமையன். தங்களைக் கொல்லுவதற்காக வந்த இரண்டு பாவிகளையும் இவன்தான் கோடிக்கரையிலிருந்து படகில் ஏற்றிக் கொண்டு வந்தான். அவர்கள் சொற்படியேதான் இவன் இதுவரை இங்கே காத்துக் கொண்டிருந்தான். அவர்களை இன்று காலையில் மறுபடியும் படகில் ஏற்றி நாம் பார்த்த கப்பலில் கொண்டு போய் விட்டானாம்! தங்கள் நண்பரும் அதிலேதான் ஏறியிருக்கிறார்...'' என்றாள்.

''பிரபு! என்னை வெட்டிக் கொன்று விடுங்கள்! அவர்கள் அத்தகைய துஷ்டர்கள் என்று எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் செய்திருக்க மாட்டேன். என்னைத் தங்கள் கையாலேயே கொன்றுவிடுங்கள்!'' என்றான் படகுக்காரன்.

''அப்பனே! இச்சமயம் உன் உயிர் எனக்கு விலைமதிப்பில்லாத பொருள். வா, போகலாம்! அந்தக் கப்பலிலேயே என்னையும் கொண்டு போய் ஏற்றிவிடு. எனக்கு நீ செய்த கெடுதலுக்கு அதுதான் பரிகாரம். புறப்படு, போகலாம்!'' என்றார் இளவரசர்.

கடற்கரையோரத்தில் சென்றதும் கரையில் கிடந்த படகைப் படகோட்டி தண்ணீரில் இழுத்துவிட்டான். இளவரசர் கடலைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். ''அதோ கப்பல் இன்னும் தெரிகிறது! பிடித்து விடலாம்!'' என்றார்.

சேநாதிபதியும் தூரத்தில் தெரிந்த கப்பலைக் கூர்ந்து பார்த்தார்.

''இளவரசே! பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று!'' என்றார்.

''என்ன? என்ன? தங்களிடமிருந்து கூட நல்ல வார்த்தை வருகிறதே!''

''நம் கண்ணுக்குத் தென்படுவது தாங்கள் நினைக்கிறபடி வந்தியத்தேவனை ஏற்றிச் செல்லும் கப்பல் அல்ல. பார்த்திபேந்திரனுடைய கப்பல். திரிகோணமலைப் பக்கமிருந்து வருகிறது. நாம் இருக்கும் திசையை நோக்கி வருகிறது. தெரியவில்லையா?''

''ஆம், ஆம்! அப்படியானால் மிகவும் நல்லதாய்ப் போயிற்று. பார்த்திபேந்திரர் வேறு ஏதோ நோக்கத்துடன்

வருகிறார். ஆயினும் நல்ல சமயத்தில் வருகிறார். சிங்கத்தைக் கொண்டே சிறுத்தையை வேட்டையாடலாம்!...... ஆனால் அந்தக் கப்பல் இங்கே வரும் வரையில் நான் காத்திருக்கப் போவதில்லை. படகில் சிறிது தூரம் சென்று எதிர்கொள்கிறேன்......''

''இளவரசே! தங்களுடன் படகில் வருவதற்கு......''

''ஐயா! நீங்கள் ஒருவரும் என்னுடன் வர வேண்டியதில்லை. இங்கேயே நின்றால் எனக்குப் பெரிய உதவி செய்ததாக எண்ணிக் கொள்வேன்...... திருமலை! உனக்குங் கூடத்தான் சொல்கிறேன். உனக்குத்தான் கடல் என்றால் தயக்கமாயிற்றே?''

''ஆம், ஐயா! நானும் பின் தங்குவதாகவே இருந்தேன். இலங்கைத் தீவில் இருக்கும் வரையில் தங்களைப் பார்த்துக் கொள்ளும்படிதான் எனக்குக் கட்டளை. முதன் மந்திரி மதுரையில் இருக்கிறார். அவரிடம் போய் இங்கு நடந்தவற்றைச் சொல்ல வேண்டும்......''

''அப்படியே செய்! பூங்குழலி! நீயும் இங்கே நிற்க வேண்டியதுதான். உன் தமையனைப் பற்றிக் கவலைப் படாதே. நான் பார்த்துக் கொள்கிறேன். நீ வந்த படகை எங்கேயோ விட்டிருப்பதாகச் சொன்னாயல்லவா? அதில் ஏறி இனி உன் வழியில் போகலாம். நீ எனக்குச் செய்த உதவியை என்றும் மறக்க மாட்டேன்... சேச்சே! கண்ணீரைத் துடைத்துக் கொள்! பார்க்கிறவர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள்?''

இவ்வாறு கூறிவிட்டு இளவரசர் ஊமை ராணியின் அருகில் சென்று அவளுடைய பாதத்தைத் தொட்டு வணங்கப் போனார். அந்த மூதாட்டி அவரைத் தடுத்து நிறுத்தி உச்சி முகந்து ஆசீர்வதித்தாள்.

அடுத்த நிமிஷம் இளவரசர் கடலில் ஆயத்தமாக நின்ற படகில் பாய்ந்து ஏறிக் கொண்டார்.

கரையில் இருந்தவர்கள் படகைப் பார்த்துக் கொண்டே நின்றார்கள்.

இளவரசரும் போகின்ற படகிலிருந்து அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

எல்லாரையும் பொதுவாகப் பார்த்தாலும் அவருடைய கண்கள் பூங்குழலியின் கண்ணீர் வழிந்த முகத்திலேயே நிலைத்து நின்றன. அதிசயம்! அதிசயம்! தூர விலகிப் போக, போக உருவங்கள் சிறியனவாக வேண்டுமல்லவா? கரையில் இருந்த மற்றவர்களின் உருவங்கள் சிறியனவாகித்தான் வந்தன. ஆனால் பூங்குழலியின் முகம் மட்டும் வரவரப் பெரிதாகிக் கொண்டேயிருந்தது. இளவரசரின் அருகில் நெருங்கி வந்து கொண்டேயிருந்தது.

இளவரசர் உடம்பைச் சிலிர்த்துக் கொண்டார். கண்களை வேறு பக்கம் திருப்பினார். முதல் நாள் இரவு கண்ட கனவில் ஒரு நிகழ்ச்சி அவர் மனக்கண் முன் வந்தது. இளைய பிராட்டி குந்தவை ''தம்பி! உனக்காக இங்கே வானதி காத்திருக்கிறாள் என்பதை மறந்து விடாதே!'' என்று கூறிய மொழிகள், கடல் அலைகளின் இரைச்சலுக்கிடையில் தெளிவாக அவருடைய காதில் கேட்டன

(தொடரும்)



நண்பர்: என்ன சார் பிரிண்ட் கார்டு...? புத்தாண்டு வாழ்த்தா...? அதுக்குள்ளேயா?

மற்றவர்: இல்லை, இல்லை; வாசகர் கடித கார்டு...!

நண்பர்: அது என்ன புதுசா இருக்கு?

மற்றவர்: வேற ஒண்ணுமில்லே, 'அட்டைப்படம் வெகு ஜோர்' 'சிறுகதை எல்லாம் டாப்' — 'நாவல் சூப்பர்,' 'கேள்வி — பதில் அருமை' இப்படி பிரிண்ட் பண்ணி வசதியா வச்சிருக்க...!

— திருத்துறைப்பூண்டி எஸ். கந்தசாமி.

உத்திரவாதமுள்ள

அசல் தங்க, வெள்ளி ஜரிகையுடன்
கலையழகு மிகுந்த காஞ்சீபுரம்
பட்டு சேலைகள், பாவாடைகள்
வாங்க சிறந்த ஸ்தாபனம்.



"மா மவ மீனாட்சி"

# மீனாட்சி அம்மன் பட்டு விற்பனை நிலையம்

23, இரண்டாவது அக்ரஹாரம்
சேலம்-636 001



64667, 66506.

---



விவரமறிந்தோர் நாடுவது

# ஆஸ்ப்ரோ ஆறுதல்





அதி உன்னதமான
தலைவலி
நிவாரணி

உலகெங்கும் பல லட்சம் பேரின் நம்பிக்கை மருந்து

# மீண்டும் வசந்தம் வரும்

நா. நாகராஜன்

கல்யாணத்தின் போது எல்லாரின் பார்வையும் அந்த இருபத்திநாலு வயதுப் பெண்ணின் மேல்தான்.

ரவிவர்மா வரைந்த மாதிரி அத்தனை அழகு.

முகத்தில் சாந்தம்; இனிமை; பளிச்சென்ற சிரிப்பு!

ஒவ்வொரு காரியத்தையும் செய்கின்ற நேர்த்தி... மற்றவர்களின் கவனத்தைத் தன் பக்கம் ஈர்த்தது.

நலுங்கின் போது பெண் வீட்டுக்காரர்கள் எல்லோரும் சேர்ந்து அவளைக் கட்டாயப் படுத்திய போது அவள் மிகுந்த சங்கடத்துடன் மூன்று கீர்த்தனைகள் பாடினாள்.

அந்தப் பாடல்களின் அழகிலும் குரலின் இனிமையிலும் கூட்டம் மயங்கிக் கிடந்தது.

"இன்னொரு பாட்டு... ஒரே பாட்டு சுஜாதா..."

"இதென்ன கச்சேரியா...? நலுங்கு தானே...?" என்று சொல்லிச் சமாளித்தாள்.

"ராஜாமணி... ரொம்ப மயங்கிடாதே! அப்புறம் உன் பொண்டாட்டி கோச்சுண்டுடப் போறா..." என்று மாப்பிள்ளையைக் கிண்டல் செய்தாள் அவன் அக்கா.

எல்லோரும் சிரித்தார்கள்.

ராஜாமணி கொஞ்சம் முறைப்புடன் அக்காவைப் பார்த்தான்.

இவர்களுக்கெல்லாம் இந்தக் கல்யாணம் விளையாட்டாக இருக்கிறது.

முப்பத்து மூன்று வயதை விழுங்கிவிட்டு பிஸினஸில் இப்போதுதான் ஒரு நிலையான — நிம்மதியான இடத்தை அடைந்து, கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தீர்மானித்த ராஜாமணிக்கு, இந்த ஜானவாசம், நலுங்கு இதிலெல்லாம் அக்கறை இல்லை.

அம்மாதான் விடவில்லை.

"உன் மூன்று தங்கைகளுக்கும் ஓர் அமிட்டமும் குறைச்சல் இல்லாமல் கல்யாணம் பண்ணி வச்சே... இது எங்க சந்தோஷத்துக்கு..." என்றாள்.

வயதான காரணத்தால் வந்த இளம் வழுக்கையும், இத்தனை வருடக் கவலையால் முகத்தில் விழுந்துவிட்ட சில சுருக்கங்களும் காஸ் லைட் வெளிச்சத்தில் ஊராரின் பேச்சுக்கு இடமானது.

பெண்ணிற்குக் கூட இருபத்தெட்டு வயது இருக்கும்.

ஆனால் கவலையால் — கல்யாணம் ஆகாத ஏக்கத்தால் மெலிந்து பாவமாகத் தோன்றுகிறாள்.

முதல் பார்வையிலேயே அவளைப் பிடித்து விட்டதும் அங்கே வைத்தே சம்மதம் சொன்னதும் இன்னமும் மறக்கவில்லை ராஜாமணிக்கு.

பெண் பார்க்கும் போது 'இந்தப் பாடுகிற பெண்' உள் அறையில் இருந்து பார்த்தது இப்போது நினைவுக்கு வந்தது.

ஏனோ அவளைப் பற்றிய மற்ற விஷயங்களையும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கின்ற ஆவல், ராஜாமணியின் உள்ளத்தில் எழுந்து கொண்டே இருந்தது.

என்ன ஓர் அமைதி தருகிற அழகு அது!

முதலிரவு அறைக்குள் இரண்டு பேரையும்வைத்துக்கதவைச்சாத்திவிட்டுவெளியில் இரண்டு மூன்று பேர்கள் பாடியபடி நின்றார்கள்...

"ராத்திரி முழுதும் பாடுவாங்களா...?" என்று கிண்டலாக ராஜாமணி கேட்டதற்குப் புதுமணப் பெண் தலையைக் குனிந்தபடி சிரித்தாள்.

பிறகு அவனுக்குப் பேசுவதற்கு நிறைய விஷயங்கள் இருந்தன.

"எந்த காலேஜ் சொன்னே...?"

"என்ன மெயின்...?"

அவள் தயக்கம் நீங்கி அவனையும் சில கேள்விகள் கேட்டாள்.

"சினிமா எல்லாம் பார்ப்பீங்களா?"

ராஜாமணி சிரித்தான்.

"உண்மையாச் சொல்லணும்னா... படம் பார்த்துப் பதினொரு வருஷம் ஆகிறது. என்னைக்கு மெக்கானிக் ஷாப் வைச்சேனோ, அன்னைக்கே பிஸினஸ்தான் என் மூச்சுன்னு ஆயிப் போனது. வீட்டில் இருக்கிற டீ. வீ.ல கூட இன்ட்ரஸ்ட் கிடையாது..."

"கதைப் புத்தகம் அது இதுன்னு... பொழுது போக்குக்கு...?"

"பொழுதைப் போக்கறதா? நேரம் இல்லாம இருக்கேன். எத்தனை கார்களை ரிப்பேர் செய்திருக்கேன் தெரியுமா? வெளிநாட்டுக் கார்கள்... பழைய மாடல் கார்கள்... எல்லாம் என் கைக்குப் பழகிருச்சு..."

"ஒரு சினிமாப் பார்க்கிற நேரத்தில் ஒரு

டயரைக் கழற்றிச் சரி பண்ணலாமேன்னு தான் புத்தி ஓடும்...'' என்றான்.

''அந்தப் பாட்டுப் பாடின பொண்ணு ரொம்பப் பாவம்...'' என்றாள்.

''யாரு... நலுங்குல பாடினவளா...? ஏன் அவளுக்கென்ன நல்லாத்தானே இருக்கா! ரெண்டு வயசுல அழகான குழந்தை வேற!''

''இல்லை... அது மட்டும் போதுமா. அவ ரொம்ப ஏழைக் குடும்பத்துல இருந்து வந்தவ. கல்யாணம் ஆனாப் போதும்னு ஒரு வயசான ஸ்கூல் வாத்தியாருக்கு ரெண்டாந் தாரமாப் பண்ணி வைச்சாங்க. நல்லாச் சொன்னா ரெண்டு வருஷம் அவரோட வாழ்ந் திருப்பா. இப்போ அவ விதவை...''

''நிஜமாவா... அடப் பாவமே...!''

''நல்லாப் பாடுவா. எல்லா வேலையும் சுறுசுறுப்பாச் செய்வா. சிரிக்கச் சிரிக்கப் பேசுவா... புருஷன் புண்ணியத்துல அவன் வேலை அவளுக்கு வந்தது...''

''இத்தனைக்கு அப்புறமும் அவ எப்படி இப்படிச் சிரிச்சுக்கிட்டு நாலு பேர் நடுவுல வளைய வர்றா...''

''அதுதான் சுஜாதாவோட ஸ்பெஷா லிட்டி...!''

''ஓஹோ...'' என்றான்.

பாவமாக இருந்தது அவனுக்கு. இந்த வயதில் இப்படி ஒரு சோதனையா... இத்தனை கஷ்டங்கள் இருக்கிறதா உலகத்தில்?

மறுநாள் சுஜாதாவை நேருக்கு நேர் பார்க்க மனம் ஒப்பவில்லை.

காப்பி கொண்டு வந்தவள் அவள்தான்.

கம்பெனி வேனில் சாமான்களை ஏற்றும் பொழுது சுஜாதாவின் குழந்தை முன் சீட்டில் ஏறி, இறங்க மாட்டேனென்று அடம் பிடித்தது.

ராஜாமணியைப் பார்த்ததும் சிரித்துக் கொண்டே அவன் மடிக்குத் தாவியது.

வேனை ஒரு ரவுண்ட் அடித்துப் போக்குக் காட்டிக் குழந்தையை இறக்கிவிட வேண்டிய தாகப் போனது.

''உங்களுக்குத்தான் ரொம்பச் சிரமம்...'' என்றாள் சுஜா.

''இதில் என்ன சிரமம்? நீங்க சம்மதிச் சாச் சொல்லுங்க... ஊருக்கே போயிட்டு ரெண்டு நாளில் திரும்பிடலாம்...'' என் றான்.

அவள் அவசரமாக மறுத்தாள்.

''கல்யாணமாயி ஜாலியா நீங்க போறீங்க... இதுக்கு நடுவுல நானா...?'' என்ற படி விலகினாள்.

ராஜாமணியின் அம்மா ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இவனா இன்னொரு பெண்ணிடம் இவ் வளவு பேசுகிறான்...!

''பாரும்மா... கல்யாணமான மறுநாளே பொண்ணு வீட்டுக்காரங்க பக்கம் சாஞ்சுட் டான்... நம்மளைக் கூப்பிட்டானா வீட் டுக்கு...?'' என்று தங்கை கிண்டலடித்தாள்.

பொய்க் கோபத்துடன் கையை ஓங்கினான்.





''நான் எம். எல். ஏ. ஆனதுக்கப்புறம் நிறையத் தியாகம் செஞ்சிருக்கேன்!''

''அதுல ஒண்ணுதான் உங்க தொகுதி யாக்கும்!''

— கொசவம்பட்டி அசோகு.

**வி**ளையாட்டு மாதிரி இருக்கிறது. அதற்குள் கல்யாணமாகி ஆறு மாதங்கள் முடியப் போகின்றன. நாட்கள் போனதே தெரியவில்லை.

இரண்டு வாரங்கள் ஒர்க் ஷாப்பை மறந்து, வேலைப் பரபரப்பை மறந்து மைசூர், பெங்களூர் என்று சுற்றிவந்த போது, ராஜாமணியின் வயதில் பாதி குறைந்து போனது.

இந்தச் சந்தோஷ நாட்களின் நடுவில் சுஜாதாவைப் பற்றிய நினைவுகள் முற்றிலும் மறந்து போயின.

அவளின் பொங்கல் வாழ்த்து அத்தனை ஞாபகங்களையும் அவனிடம் மீண்டும் எழுப்பியது.

''நாம கூட அவளுக்கு அனுப்ப மறந்துட்டோம்... இல்லையா...? சுஜா எவ்வளவு நல்ல தோழி எனக்கு...''

''இப்பச் சொல்லு!''

''இல்லீங்க... அவ மனசு அப்படி. எல்லார்கிட்டேயும் ஒரே மாதிரி அன்போட பழக, அவளால்தான் முடியும்...

''நான் அடுத்த வாரம் வேலை விஷயமா அங்கே போறேன். அப்போ அவளைப் பார்க்கிறேன்...''

''**லி**ங்கமூர்த்தி காரை சர்விசுக்கு விட வந்திருந்தான்.

வழக்கம் போல் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு, ராஜாமணியிடம் அரட்டை அடிக்க வந்தான்.

அப்போதுதான் ராஜாமணியின் மனத்தில் அந்த எண்ணம் உதயமானது.

'சுஜாவை இவனுக்குக் கேட்கலாமோ?

இவனும் அனாதை, லட்சியவாதி. 'ஒரு விதவையைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்' என்கின்ற சீர்திருத்தக் கொள்கையில் இருக்கிறான்.

தயங்கித் தயங்கிச் சொன்னான் ராஜாமணி.

ஒளிவு மறைவு இல்லாமல் ஒவ்வொன்றாக வார்த்தைகள் நினைத்த மாதிரி வராமல் சங்கடப்படுத்தின.

என்னதான் லிங்கமூர்த்தி பழகியவன் என்றாலும் இது அவன் வாழ்க்கைப் பிரச்னை.

''நீங்க பார்த்துச் செய்தால் சரிதான் அண்ணா...'' என்றான்.

அந்த அன்பு — அந்த நம்பிக்கை, ராஜாமணியின் நெஞ்சைத் தொட்டன.

''ரொம்ப தேங்க்ஸ் மூர்த்தி. சுஜா என்னோட இன்னொரு தங்கை மாதிரி...'' என்றான்.

**ரா**ஜாமணி வந்து கதவைத் தட்டும் போது சுஜா அப்போதுதான் தூங்கி எழுந்திருந்தாள்.

''நீங்களா... வாங்கோ... உட்காருங்கோ...''

''சௌக்கியமா...?''

''ம்... இருக்கேன்...'' என்றான்.

ஒரு நிமிஷம் எப்படி ஆரம்பிப்பது என்று தெரியவில்லை. லிங்கமூர்த்தியிடம் உண்டான பழக்கம் கூட இவனிடம் கிடையாது.

''வந்து... நான் வந்தது...''

''ம்...'' என்று ஆவலுடன் அவன் பேசப் போவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''சுருக்கமாகச் சொல்லணும்னா உங்க மறு கல்யாண விஷயமா... என் ஃப்ரண்ட் ஒருத்தன் — நல்லவன் — டிரைவராக இருக்கான். அவன் உங்களைப் பண்ணிக்கிறதுக்கு மனப்பூர்வமாச் சம்மதிச்சுட்டான். அதான் உங்களையும் ஒரு வார்த்தை...''

''சாரி. நான் அந்த எண்ணங்களைத் தள்ளி வைச்சுட்டேன். ஒரு தடவை நேர்ந்தது விதி. இன்னொரு தடவை தெரிந்தே நான் ரிஸ்க் எடுக்க விரும்பலை. நான் இப்போ சந்தோஷமாக இருக்கேன்...''

''எது சந்தோஷம், வாழ வேண்டிய வயசுல இப்படி இருக்கிறதா! நான் கூட இத்தனை வயசு வரை பண்ணிக்காமல் இருந்தேன். இப்போ என்னோட வாழ்க்கை நல்லா இருக்கிறதா நினைக்கிறேன். சில முடிவுகளை நாம நம்பிக்கையோட எடுக்கணும். இப்படி உங்க வாழ்க்கை அமையணும்னு உங்களுக்கு விதிச்சிருக்கலாம் இல்லையா...? ப்ளீஸ் நான் சொல்றதை இன்னொரு தடவை யோசனை பண்ணிப் பாருங்க. அவன் ரொம்ப நல்லவன்... நான் அவன்கிட்ட வெளிப்படையாகப் பேசிட்டேன்...''

சுஜா கொஞ்சம் யோசிப்பது தெரிந்தது. உள்ளே போய்க் காப்பி போடும் சாக்கில் கொஞ்சம் நேரம் கடத்தினாள்.

இத்தனை சின்ன வயதில், தானே தன் பாதையைத் தீர்மானிக்க நேர்ந்ததற்காகவும் அதற்கு ஊர் உலகம் என்ன எதிர்ப்புத் தெரிவிக்குமோ என்றும் அவள் ரொம்பவும் கவலைப்பட்ட மாதிரி தெரிந்தது.

காப்பியைக் குடித்துவிட்டுக் கிளம்பும் போது, ''உங்களுக்கு இதில் இஷ்டம் இல்லைன்னா சொல்லிடலாம். இன்னிக்கே சொல்லணும்னு கூட இல்லை. ரெண்டு நாள் யோசிக்கக் கூட சொல்லலாம்...'' என்றான்.

'ம்' என்று மட்டும் தலையாட்டினாள்.

''வர்றேன் சுஜா...''

''சரின்னா...''

''சுஜா... என்ன சொன்னே...?''

''நீங்க பார்த்துச் செய்தால் சரி அண்ணா...!''

ராஜாமணி ஒரு நிமிஷம் நின்று திருப்தியுடன் அவளையே பார்த்தான்.



# சிவபெருமானை எந்தெந்த மலர்களினால் பூஜித்தால் என்னென்ன பலன்கள் கிடைக்கும்

| விரும்பும் பலன | எந்த மலரால் அர்ச்சிக்க வேண்டும் |
|---|---|
| 1. பெருஞ் செல்வம் விரும்பு வோன் --- | தாமரை மலர், வில்வம், சதபத்திரம் சங்கபுஷ்பம், ஆகியவற்றால் லட்சக்கணக்கில் பூஜித்தால் சந்தேக மில்லாமல் பெருஞ்செல்வத்தைப் பெறுவான். |
| 2. இராஜபோகத்தை விரும்பு வோன் --- | பழுதில்லாத பத்து கோடி மலர்களால் பார்த்திவ் லிங்கத்தைப் பூஜிக்க வேண்டும். அல்லது பத்து கோடி வில்வ தளத்தை சுகந்த சந்தனத்தில் தோய்த் துப் பூஜிக்க வேண்டும். இதற்கு தாமரை மலர்கள் அல்லது சங்க புஷ்பங்கள் பூஜிக்கத்தக்கவை. பிறகு தூபதீபண நைவேத்ய அர்கிய, ஆரார்திக் பிரதக்ஷிணை, நமஸ்கார, க்ஷமாபணவிஸர்ஜனத் முதலியவற்றைச் செய்தால் இஷ்ட போகமும் ராஜரீகமும் உலகநாயக ரான சிவபெருமான் திருவருளால் கிடைக்கும். |
| 3. பிரதானித்துவத்தை விரும்புவோன் ---- | ஐந்து கோடி மலர்களாலும் |
| 4. சிறையிலிருந்து நீங்க விரும்புவோன் ---- | லக்ஷம் புஷ்பங்களாலும் |
| 5. நோய் நீங்க விரும்புவோன் -- | ஐம்பதாயிரம் மலர்களாலும் |
| 6. அழகான மங்கையை மணம் செய்ய விரும்பு வோன் --- | இருபத்து ஐயாயிரம் மலர்களாலும் |
| 7. கல்வியில் விருப்பம் கொண்டவன் ----- | பன்னிராயிரத்து ஐநூறு மலர்களாலும் பூஜிக்க வேண்டும். |
| 8. கீர்த்தியடைய வேண்டிய வர்கள் --- | பதினாயிரம் மலர்களாலும் |
| 9. முக்தி வேண்டியவன் ----- | ஐந்து கோடி மலர்களாலும் |
| 10. ஞானம் வேண்டியவன் ---- | கோடி மலர்களாலும் அர்ச்சனை செய்ய வேண்டும். |
| 11. சிவபெருமான் பிரத்தி யட்சமாக வேண்டியவன் ---- | அரைக் கோடி மலர்களால் அர்ச்சித்து மிருத்யுஞ்சய மந்திரத்தை ஐந்து லக்ஷம் முறை உரு ஜபிக்க வேண்டும். |
| 12. தேகத் தூய்மையை விரும்புவோன் ----- | லக்ஷ மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். |
| 13. ஜன்மாந்திர ஞானம் விரும்புவோன் ------ | இரண்டு லக்ஷம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். |

# விரும்பும் பலன் எந்த மலரால் அர்ச்சிக்க வேண்டும்

14. கர்ம தாசனம் வேண்டு பவன் ---- மூன்று லக்ஷம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும்.

15. ஸ்வப்பதை தரிசனம் வேண்டுபவன் ---- நான்கு லட்சம் மலர்களால் அர்ச்சிக்க வேண்டும்.

16. தீர்க்காயுளை விரும்பு வோன் ---- லட்சம் அருகினாலும்

17. புத்திரப்பேற்றை விரும்பு வோன் ---- லட்சம் கருவூமத்தையாலும்

18. புகழை விரும்புபவன் ---- லட்சம் அகத்திப் பூவினாலும்

19. சித்தி முகத்தினை வேண்டியவன் ---- லட்சம் துளசியாலும்

20. சத்துருஷ்யம் வேண் டியவன் ---- லட்சம் லட்சம் வெள்ளெருக்க மலர்களாலும்

21. ரோக நீக்கம் விரும்பி யவன் ---- மாதுளை மலர், உற்பல மலர், சப்பாத்தி மலர்களாலும், கரவீர மலர்களாலும்

22. விஷ்ணுவின் அனுக்கிர கத்தை வேண்டுபவன் ---- அதஸிப் பூவினாலும் முக்திகாமி வன்னியினாலும்

23. தானியசம்பத்தை வேண்டியவன் ---- மலை மல்லியாலும்

24. வஸ்திர சம்பத்தை வேண்டியவன் ---- கோங்க மலராலும்

25. மனநிர்மலத்தை வேண்டு பவன் ---- நிர்க்குண்டியாலும் பூஜிக்க வேண்டும்.

---

சிவப் பிரீதியான மலர்கள் கிடைக்காவிட்டால் இதர மலர்களால் பூஜிக்கலாம்.

---

*எந்த மலர்களால் சிவபெருமானை பூஜிக்கக் கூடாது.*

சண்பகம், தாழை இவ்விரண்டு மலர்களால் சிவபெருமானை பூஜிக்கக் கூடாது

— சிவமஹாபுராணம்

19

# வேரில்லாத மரங்கள்



ஷவரிலிருந்து தண்ணீர் பூத்தூறலாக விழுந்து கொண்டிருக்க, மிருதுவான ரோஜா இதழ்களை யாரோ மேலே இருந்து மெனக்கெட்டுத் தூவுகிற மாதிரி சிலிர்த்தது மாதவனுக்கு.

தலையை அப்படி இப்படித் திருப்பியும், குனிந்தும், நிமிர்ந்தும் அந்தக் குளியலை அனுபவித்த போது, மனம் சந்தோஷமாக இருப்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது.

கடந்த பத்துப் பதினைந்து நாட்களாய்த் தினம் இரண்டு வேளையும் இதே மாதிரி குளியலை அனுபவித்துக் கொண்டிருந்தாலும் கூட, என்னவோ காணாததைக் கண்டுவிட்ட தினுசில் முதல் நாள் ஏற்பட்ட பரபரப்பு இன்னமும் தீர்ந்தபாடில்லை.

குளிப்பதென்றால், எந்த இடத்துக்கும் பொதுவாகத் தண்ணீரும் சோப்பும் டவலும் இருந்தால் போதுமானதுதான் — ஆனால், எத்தனை தேய்த்தாலும் போகாத பாசித் தரையில் வழுக்கி விழுந்து, சரியாகப் பூசப்படாத சுவர்களின் இடுக்குகளிலிருந்து கரப்பானும் பூரானும் எட்டிப் பார்க்கின்றனவா என்று பயந்து பயந்து, கை கால்களை அங்குலத்துக்கு மேல் அசைக்காமல் நின்ற இடத்திலேயே தொட்டியில் பிடித்து வைத்து நாற்றம் ஏறிப் போன தண்ணீரைத் தலையில் விட்டுக் 'குளித்தேன்' என்று இத்தனை நாள் பேர் பண்ணியதற்கும்,

தரையில் மொசைக் கல்லும், சுவர்களில் டைல்சும் பதிக்கப்பட்டுப் பளபளத்த பாத்ரூமில், இப்படி ஆனந்தமாய்க் குளித்து, வாஷ்பேசினுக்கு மேல் இருந்த கண்ணாடியில் முகத்தை ரசித்து இங்கேயே தலைவாரிப் பவுடர் அடித்துக் கொண்டு மணக்க மணக்க வெளியில் வருவதற்கும் வித்தியாசம் இல்லையா!

இந்த வித்தியாசம் குளியலறையில் மட்டுமல்ல, வீடு மொத்தத்திலும்தான் இருக்கிறது.

மாயா ஜாலக் கதைகளில் வருகிற மாதிரி, அந்தப் பழைய சின்னப் போர்ஷன் மறைந்து, சின்னத் தோட்டமும் காம்பவுண்ட் சுவரும் கொண்ட லட்சணமான பெரிய தனி வீடாகவே ஆகிவிட்டது.

மூன்றடி உயரத்துக்குக் கம்பி 'கிரில்' போட்ட வராந்தா என்ன, நாள் கிழமை என்றால் விருந்தினர்கள் தாராளமாய் உட்கார்ந்து சாப்பிடுகிற மாதிரி கூடம் என்ன, அகலமும் நீளமுமாய் மூன்று படுக்கை அறைகள் என்ன, ஒவ்வொன்றுடனும் இதுபோன்று ஒட்டிக் கொண்ட குளியலறைகள்

என்ன, கடப்பைக் கல்லால் ஆன மேடை கொண்ட சமையலறை என்ன...

கே. பி. சுந்தராம்பாள் ஸ்டைலில் தனக்குத் தானே 'என்ன... என்ன' என்று கேட்டுக் கொள்வது உதட்டின் உட்புறத்தைக் கிழித்துக் கொண்டு ஒரு முறுவலை எழுப்ப, சிரிப்பு மாறாமலேயே ஷவரை நிறுத்திவிட்டு, எட்டிச் சோப்பைக் கையில் எடுத்தான்.

சோப்பைக் குழைத்து உடம்பில் தேய்க்கையில் மறுபடி மனம் ஹா... ஹா... என்கிற பூரிப்போடு இத்தனைக்கும் காரணமான அப்பாவை எண்ணிக் குதிக்க முற்பட்டது.

இத்தனை நாட்களாய் இல்லாத வசதிகள் இப்போது கிடைத்தது அப்பாவால்தானே! எக்கச்சக்கத்துக்குப் பணத்தை வாரி இறைத்து இத்தனையையும் செய்து கொடுத்திருப்பது அவரின் பெருந்தன்மைதானே!

அன்று, 'அப்பாவை இங்கே வந்து நம்மோடு தங்கிவிடச் சொன்னால் என்ன?' என்று வசந்தா கேட்டபோது, இது நடக்கிற காரியம்தானா என்ற சந்தேகம் எழுந்தாலும், மறுபடியும் மறுபடியும் பேசி, விவாதித்து, அலசியபோது, இந்த முடிவைத் தவிர வேறு எதுவுமே சாத்தியமில்லை என்றே தோன்றியது.

அந்த வாரக் கடைசியில் காஞ்சிபுரம் சென்று அப்பாவைப் பார்த்தபோது, சொல்லி வைத்த மாதிரி அவரே முந்திக் கொண்டு, சும்மா இந்த நெலத்தையும் வீட்டையும் பார்த்துப் பார்த்து அலுத்துப் போச்சு... எல்லாத்தையும் வித்துத் தொலைச்சிட்டுக் காசி, ராமேஸ்வரம் போயிடலாமான்னு தோணுது தம்பி...' என்று ஏதோ ஒரு வேதனையில் அங்கலாய்த்தது ரொம்பத் தோதாய் அமைந்தது.

ஒரு மாறுதலைத் தேடி அவர் ஏங்கும் இந்தத் தருணத்தை உபயோகித்துக் கொள்வதே புத்திசாலித்தனம் என்று தோன்றினாலும், பேசுகிற விதத்தில் பேசி அவரை இங்கே சென்னைக்கு வரவழைப்பதற்குள் போதும் போதும் என்றுதான் ஆனது......

அ! பட்டணத்துக்கா? நானா? உங்க கூடவா? அதெல்லாம் சரிப்படாது தம்பி' என்றார்.

'நிலம் நீச்சை எல்லாம் விட்டுட்டு வர்றது நடக்கிற காரியமில்லப்பா... வேறே எதுனாச்சும் பேசு...' என்றார்.

'நான் கிராமத்துக்காரன்... உங்க பட்டணத்து வாழ்க்கை தோதுப்படாது தம்பி' என்றார்.

'நான் இருக்கப் போறது இன்னும் கொஞ்ச நாளு... இருக்கற வரைக்கும் உங்கம்மா வாழ்ந்த இடத்துலேயே இருந்திடறேன், என்னை விட்டுடு...' என்றார்.

இன்னும் என்னென்னவோ சொன்னார்.

மாதவன்தான் எதையும் காதில் வாங்கவில்லை...

விடாக்கண்டனாகப் பிடிவாதம் பிடித்து, 'ஆடற மாட்டை ஆடிக் கற, பாடற மாட்டைப் பாடிக் கற' என்று பேசுகிற விதத்தில் பேசி, முடியாதபோது கெஞ்சி, தழைந்து, அதட்டி... கடைசியில் சம்மதத்தை வாங்கி......

சிவசங்கரி

ஊரை ஒழித்துக் கொண்டு பட்டணத்தோடு போவது என்று தீர்மானமான பிறகு தணிகாசலம் அவராகவே சொன்னார்:

"சரி, வர்றதுனு ஆயிடுச்சு... இனிமே அதுக்குண்டான காரியங்களை நல்லவிதமாச் செஞ்சு முடிக்கிறதுதான் புத்திசாலித்தனம்... மூக்கோட்டை மாதிரி இத்தனூண்டு வீட்டுல நீ இருக்கறதப்பத்தி உங்கம்மா எப்பவும் வருத்தப்பட்டுக்கிட்டே இருப்பா... அதனால், உடனடியா அது விஷயமா கவனிக்கணும். இனிமே ஆயுசு முழுதும் நானும் அங்கேதான் வந்து இருக்கணுமின்னு, முதல் காரியமா நல்ல வீடாப் பார்த்து வாங்கிடு... நமக்கு இருக்கிற சொத்துக்கு, நீ வாடகை வீட்டுல இருக்க வேண்டியதே இல்லே... நாளைக்கே புரோக்கர் கண்ணாயிரத்துகிட்ட சொல்லிப் பாதி நிலத்தை விக்க ஏற்பாடு பண்ணிடணும். நல்ல வசதியான இடமாகப் பார்த்து வெச்சின்னு, நான் உடனே வர்றேன்... முடிச்சிடலாம்."

அப்பா இப்படிப் பேசினதும், அதெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளக் கூடாதா, தலைபோகிறபடி என்ன அவசரம் என்கிற கேள்வியோடு, கூடவே இந்த வசதிக் குறைச்சலைக் காரணம் காட்டித்தானே முன்பு அம்மாவின் வருகை தள்ளிப் போடப்பட்டது என்பதும் நினைவுக்கு வந்தது.

ஒருமுறை கூடப் பேரனைப் பார்க்காமல் அம்மா போயே போய் விட்ட தினுசில் அப்பாவின் ஆசையும் நிராசையாகப் போய் விடாமல், இனி அப்பாவையாவது சந்தோஷமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்கிற வைராக்கியம் எழ, அவரது நிபந்தனையை ஏற்றுக் கொண்டதில், ஸ்விட்ச் போட்ட மாதிரி காரியங்கள் நடந்தேறின.

காஞ்சீபுரத்து வீட்டை விற்று அந்தப் பணத்தையும், ஏற்கெனவே பாங்கில் இருந்த பணத்தையும் உடனடியாக மாதவன் பெயரில் தணிகாசலம் மாற்றினார். சாப்பாட்டுக்கு மட்டும் நெல் வருகிற மாதிரி கொஞ்சமாய் நிலத்தைக் குத்தகைக்கு விட்டு, பாக்கி இருந்த வயல்காட்டையும் தோப்பையும் துரவையும் விற்றுக் காசாக்கி அதையும் சென்னை வங்கிக்குக் கொண்டு வந்ததில்,

லாட்டரியில் பரிசு விழுந்து திடீரென்று சீமானாக உருவெடுத்தாற்போல், வடபழனி அருகில் சாலிக்கிராமத்தில் மெயின் ரோட்டை விட்டு விலகி உள்ளடங்கி இருந்த இந்தத் தனி வீட்டை வாங்குவது சாத்தியமாயிற்று...

இத்தனை தூரத்திலிருந்து ஆபீஸுக்குத் தினம் பஸ்ஸில் போய் வருவது சிரமம் என்று புதுசாய் ஸ்கூட்டர் ஒன்றை வாங்கியாயிற்று... இன்னும்... இன்னும்...

சோப் கையை விட்டு நழுவிக் கீழே விழ, மாதவன் குனிந்து அதை எடுத்து வைத்து விட்டுக் குளியலைத் தொடர்ந்தான்.

வசதிகள் கிடக்கட்டும்.

அலைச்சலும், வேதனையும், உறுத்தலும் இல்லாமல் மனசு நிறைந்து இருப்பதற்கு இவை மட்டும்தானா காரணம்?

இல்லை

வீட்டுக்குப் பெரியவராய் அப்பா கூடவே இருப்பதும், அம்மா போன பிறகு எப்போதும் சோர்வுடன் கூம்பிக் காட்சியளித்தவரின் முகத்தில் இப்போது சந்தோஷத்தின் சாயல் படிய ஆரம்பித்திருக்கிறதும் பேரனோடு கொஞ்சி விளையாடுவதில்...

கதவு தட்டப்பட்டு, "மாது... குளிச்சு முடிச்சிட்டீங்களா இல்லியா?" என்ற வசந்தாவின் குரல் கேட்டது.

குழைத்துக் குழைத்துத் தேய்த்த சோப்பு நுரை கை முழுவதும் புஸ- புஸ-வென்று இருக்க, மாதவன் திடுக்கிட்டு "அ.... ஆச்சு வசு... இதோ வந்திட்டேன்..." என்று சமாளித்தான்.

மறுபடியும் ஷவரடியில் தலையை நீட்டிய நிமிஷத்தில் மனசு வசந்தாவைச் சுற்றி வந்தது.

'மாமா காத்தாட வாழ்ந்து, காலார நடந்தும், கோவில் குளம்னு போயும் பழக்கப்பட்டவங்க... அதனாலே அவங்களுக்கு எங்க வீடு வாங்கினா வசதியா இருக்குமோ அதைத்தான் செய்யணும் மாது' என்று கூறி, ஓடியாடிச் சாலிக்கிராம வீட்டைத் தேர்ந்தெடுத்து முன்பக்கத்து அறையை அவரின் புழக்கத்துக்கு ஏதுவாய் ஒதுக்கி...

அவள் மட்டுமல்லாமல் அத்தம்மாவும் கூட அன்பாகவும் மரியாதையாகவும் இருந்து, 'பெரியவர்' என்ற ஸ்தானத்தை அப்பாவுக்கு அளித்து...

மறுபடியும் கதவு தட்டப்பட, விறுவிறுவென்று வெளியே வந்தவன் வசந்தாவைப் பார்த்து அசட்டுச் சிரிப்புடன், "ஸாரி... ரொம்ப நேரமாயிடுச்சு, இல்லே..." என்று சொல்லிவிட்டு, இடுப்பில் லுங்கியை அணிந்து, கட்டியிருந்த துண்டை அவிழ்த்து எறிந்தான்.

இரண்டு டிபன் டப்பாக்களிலும் நாலு நாலாகப் பூரிகளை அடுக்கி, அதன்மீது குட்டித் தட்டுக்களில் கிழங்கை வைத்து மூடி, தனித்தனி பிளாஸ்டிக் பைகளில் போட்டு, ஒன்றைத் தன் கைப்பையிலும், மற்றதை ஸ்கூட்டரில் இருந்த பாக்ஸிலும் வைத்து விட்டுத் திரும்பிய பின்னும்கூட, சற்றுமுன் தோன்றிய புன்சிரிப்பு இன்னமும் தேயாமல் வசந்தாவின் இதழிலேயே ஒட்டிக் கொண்டிருந்தது.

வாய்க்கு வாய் 'முருகா' என்றும் 'அப்பனே ஷண்முகா' என்றும் வார்த்தைகளை உதிர்க்கும் மாமாவுக்கு, இந்தக் குடும்பத்துடன் ஒட்டுதல் ஏற்படுமோ படாதோ என்ற சந்தேகம் முளையிலேயே பட்டுப் போகும்படி, அவருக்கும் தனி அறை அமைந்து விட்டது. அதுவும் வாசல் பக்கமாய் இருந்து விட்டதில், வீட்டுக்குள் அதிகமாக அவர் புழங்குவது கூடச் சாத்தியமில்லை

மாமா வாசப்பக்கத்தோடு, தான் — தம் அறை — தம் சாமி — பூஜை — திருவாசகம் — திருப்புகழ் என்று இருக்கிறார் என்றால், பழைய சின்ன வீட்டில், சமையலறையி

• உன்னைக் கண்டுகொள்ள உன் மூளையை உபயோகி. பிறரைக் கண்டுகொள்ள உன் இருதயத்தை உபயோகி.
— ஷேக்ஸ்பியர். தகவல்:— ஏ. கே. நாசர்.

# சர்க்கரை பற்றிய பயத்தை விட்டொழியுங்கள் சர்க்கரையின் முழுச்சுவையை அனுபவியுங்கள்!

## இப்போது

# ஸ்வீட்'அன்லோ

சர்க்கரைக்கு
பதிலாக




SWEET'N LOW

ஆரோக்கியத்தில் அக்கறை
உள்ளவர் களுக்கு தேவை—
''ஸ்வீட் அன்லோ'' சர்க்கரை நோய்
உள்ளவர்களுக்கு அவசியம்
தேவை— ''ஸ்வீட் அன் லோ''
உடல் பருமனை குறைப்பதற்கும்
''ஸ்வீட் அன் லோ''



SWEET'N LOW

காபி டீ மற்றும்
அனைத்துபானங்
களிலும் சர்க்கரைக்கு பதிலாக
உபயோகிக்கலாம்.
28 மேலை நாடுகளில்
30 ஆண்டுகளாக பிரசித்தி
பெற்ற ''ஸ்வீட் அன் லோ''
இப்போது தமிழகத்தில்
முக்கிய கடைகளில
கிடைக்கிறது.



SWEET'N LOW

ஒரு பாக்கெட் ''ஸ்வீட்
அன் லோ'' =இரண்டு ஸ்பூன்
சர்க்கரைக்கு சமம்.



இந்தியாவில் தயாரிப்போர்.
**இபிஸ் ஹெல்த் எய்ட்ஸ் லிமிடெட்,** தும்கூர், கர்நாடகம்.

மொத்த விற்பனையாளர் (தமிழ்நாடு)
**யோக்ராஜ் எண்டர்பிரைசஸ்,**
870, டாக்டர் இராமசாமி சாலை, கே.கே. நகர்,
சென்னை-600 078 தொலைபேசி: 427738



''மாமா! உங்க பொண்ணு சைக்கிள்ல போனுக் கூட என்னோட இடுப்பைக் கட்டிப் பிடிச்சுக்கறு!''

''ஏனுங்க மாப்ளே... சுத்தி வர்றீங்க? ஸ்கூட்டர் வேணுமுன்னு நேராவே கேளுங்களேன்!''

— ஆல்பர்ட் ராஜ்.

லேயே ஏகநாதர் படத்தை மாட்டி, பீடத்தில் விளக்கேற்றி அத்தம்மா தோத்திரம் சொல்ல நேர்ந்ததைப் பார்த்து முகம் சுளித்த மாதவன், இப்போது அதைப் பற்றி ஏதும் பேச வழியில்லாதபடி அத்தம்மாவுக்கும் தனி அறை ஒதுக்கி விட்டதில் அந்தப் பிரச்னையையும் சமாளித்தாகி விட்டது.

சென்று முடிந்தவற்றைப் பற்றின சிந்தனையுடன் கூடத்துக்கு வந்து கொண்டிருந்த வசந்தா தடக்கென்று மாதவன் மேல் மோதிக் கொண்டாள்.

''ஏ... என்ன வசு, பார்த்து வரக் கூடாது?''

''ஸாரி... என்னமோ யோசிச்சிக்கிட்டே வந்திட்டேன். டயமாயிடுச்சு, சாப்பிட வர்றீங்களா?''

சரி என்று தலையாட்ட, சமையலறைக்குள் சென்று பதார்த்தங்கள் நிறைந்த பாத்திரங்களை எடுத்து வந்து டைனிங் டேபிளில் வசந்தா வைத்தாள்.

''மாமா சாப்பிட வரலையா மாது?''

''கூப்பிட்டேன், ஆனா அவரு அப்பறமா சாப்பிட்டுக்கறேன்னிட்டாரு... இன்னிக்கு சஷ்டி... காலையிலே வடபழனி கோவிலுக்குப் போயிட்டதால, கந்த சஷ்டிக் கவசத்தை இன்னும் சொல்லி முடிக்கலையாம். 'நீங்க சாப்பிடுங்க, நான் கவசம் சொல்லிட்டு, பொறுமையாச் சாப்பிட்டுக்கறேன்'னிட்டாரு...''

''அப்பறமாவா? நாம ரெண்டு பேரும் ஆபீஸ் போயிட்டா, அவரு எப்படி...?''

அவள் சங்கடம் புரிந்த மாதிரி மாதவன் குரலைத் தழைத்துப் பதில் கூறினான்.

''அத்தம்மா கூச்சப்பட்டாங்கன்னா, அவங்க பரிமாற வேணும். டேபிள்ல எடுத்து வெச்சிட்டு 'நீங்களே பரிமாறிக்கங்க'ன்னு சொன்னா, தப்பா எடுத்துக்க மாட்டாரு...''

அது மரியாதையான செயலாக இருக்குமா என்று கேட்க நினைத்து, பின் மாதவனுக்கே சரி என்று பட்டால் வேறு எதைப் பற்றியும் யோசிக்கத் தேவையில்லை என்ற தீர்மானத்தில் அதோடு அந்தப் பேச்சை வசந்தா முடித்துக் கொண்டாள்.

சாப்பிட்டு முடித்து, குழந்தைக்குத் தேவையானதை எடுத்து வைத்து, கடைசி நேர ஒப்பனைக்காகக் கண்ணாடி முன் நின்றவளின் அருகில் மாதவன் வந்து நின்றான்.

''கிளம்பிட்டியா வசு?''

''ம்... நீங்க ரெடியா?''

''கிளம்ப வேண்டியதுதான்... அப்பா சஷ்டிக் கவசத்தை மத்தியானமா படிச்சிக்கிறாராம்... 'இப்பவே சாப்பிட்டுர்றேன், ஒரு வேலை ஆயிடும்'னு சொல்றாரு...''

தோள்பட்டையில் மேலாக்கை மடிப்பாகக் கொசுவி, 'பின்' ஒன்றைக் குத்தும் முயற்சியில் ஈடுபட்டிருந்த வசந்தா, திரும்பாமலேயே கேட்டாள் —

''அஞ்சு நிமிஷம் முன்னால அப்புறமா சாப்பிட்டுக்கறேன்னாரே!''

அவள் குரலில் விரவியிருந்த கிண்டல் எரிச்சலைக் கிளப்ப, மாதவன் அவசரமாகப் பதில் கேள்வி கேட்டான்:

''சொல்லிட்டா என்ன, மாத்தக் கூடாதுன்னிட்டு சட்டமா என்ன?''

கைப்பையை எடுத்துத் தோளில் மாட்டிக் கொண்டே, ''சட்டமும் இல்லே, கிட்டமும் இல்லே... நமக்கு நாழியாகுதேனு கேட்டேன். நீங்க சொன்னீங்களேனு டேபிள்ல எடுத்து வெச்சிருக்கேன், போட்டுக்கிட்டுச் சாப்பிடறது கஷ்டமா?'' என்றவள் செருப்பை அணியத் துவங்க, மாதவனின் எரிச்சல் அதிகமானது.

''நில்லு... நான் பாட்டுக்குப் பேசிக்கிட்டே இருக்கேன், எதையும் காதுல வாங்காம உன் போக்குக்கு நீயும் கிளம்பிக்கிட்டே இருந்தா என்ன அர்த்தம்?''

அவன் குரல் ஓங்கி ஒலிக்க, வசந்தா சரக்கென்று திரும்பினாள்.

''ஒரு அர்த்தமும் இல்ல... நீங்கதான் வாய்க்கு வந்த தினுசில என்னென்னவோ பேசறீங்க... எடுத்து வைனு சொன்னீங்க, வெச்சேன். இப்ப பரிமாறுனு சொல்றீங்க... இப்படி மாத்திப் மாத்திப் பேசினா என்ன அர்த்தம்? எனக்குத்தான் உங்க போக்குப் புரியல... விரட்டறதுக்கும் ஓர் அளவு வேணும்.''

பேசிக் கொண்டே கைப்பையை எடுத்து மேஜை மேல் வீசி, செருப்புகளை உதறிவிட்டு வேகமாய் அவள் உள்ளே போக, இவனுடைய கத்தல் அப்பா காதில் விழுந்து விடப் போகிறதே என்கிற பயத்தோடு, வசதியாய் வாழ அவர் பணம் வேண்டும்; ஆனால் அவருக்காக ஓர் ஐந்து நிமிஷம் விட்டுக் கொடுப்பது என்பது மட்டும் முடியாத காரியமா என்கிற ஆத்திரத்தனமான கேள்வியும் சேர்ந்து கொள்ள, ''ஏய்... ஏய்... நில்லு.... உன் மனசுல என்னதான் நினைச்சுக்கிட்டு இருக்கே...?'' என்று அடிக்குரலில் உறுமியவாறு கால்களை அகல அகலமாய் வைத்து மாதவனும் பின்னோடு சென்றான்.

(தொடரும்)

**தளபதி திடமதி:**

# முடியரசுடன் கூடிய குடியரசு



''என்னமோ அமெரிக்காவில்தான் ஸ்டார் வார்ஸ் பற்றிய முயற்சிகள் மேற்கொள்ளப்படுவதாகப் பேசுகிறார்கள்! ஆனால் தமிழ்நாட்டில் நாங்கள் ஏற்கெனவே ஸ்டார் வார்ஸை ஆரம்பித்து நடத்திக் கொண்டிருக்கிறோம்! ஆட்சியைப் பிடிக்க இங்கே நட்சத்திரங்களுக்கிடையில் நடக்கிற யுத்தம் மாதிரி உலகில் வேறெங்காவது நடக்கிறதா என்று கேட்கிறேன்!''

— ஜி. மாஜான், திருச்சி.

---

திடமதி: என்ன ஸார், ரொம்பக் கவலையா இருக்கீங்க?

அதிகாரி: தமிழக அரசின் நிதி நிலைமை ரொம்ப மோசமாயிருக்கு. என்ன பண்ணலாம்னு ஆளுனர் ஆலோசனை கேட்கிறாரு...

திடமதி: ப்பூ, இதுதானா பிரமாதம்? கள்ளச் சாராயத்தின் பேரிலே ஒரு வரி விதிச்சுடுங்க; அவ்ளோதான். கஜானா ரொம்பி வழியும் பாருங்க!

— ஏ. கிரி, மேலக்காவேரி.




---

''அமைச்சரவை அமைக்க எனக்கு என்ன தகுதி இருக்கிறது என்று கேட்கும் எதிரிகள் முகாமுக்கு நான் கூறிக் கொள்கிறேன். முப்பது எம். எல். ஏக்களைக் கடத்திப் போய்க் காவலில் வைத்த உங்களுக்கு அமைச்சரவை அமைக்கத் தகுதி இருக்கிறதென்றால், அறுபது எம். எல். ஏக்களைக் கடத்திப் போய்க் காவலில் வைத்த எனக்கு அந்தத் தகுதி இல்லாமல் போய்விடுமா? இதை மக்கள் சிந்திக்க வேண்டும்!''

— கே. நடராஜன், விழுப்புரம்.

---

தொண்டர்: தலைவரே! உலகில் எங்கேயோ முடியரசுடன் கூடிய குடியரசு நடக்குதாமே, எங்கே?

திடமதி: அட அசடே! இது தெரியாதா? தாய் இறந்தால் மகனுக்கும், கணவன் இறந்தால் மனைவிக்கும் உடனே பதவிப் பிரமாணம் செய்து வைக்கும் நம் இந்தியாவில்தான்!

— ஸ்ரீமதி சுப்பிரமணியன், சென்னை — 28.







# அரக்கன்

சபை கூடிவிட்டது.

உதயகுமார் தலைகளை எண்ணினான். இருபத்து நான்கு பேர். இரண்டு டஜன் அங்கத்தினர்களும் இளமையின் வலுவான துடிப்பும், இலக்கில்லாத தவிப்புமாக உதடுகளில் சிகரெட்டுகளைச் சுமந்திருந்தனர்.

"நண்பர்களே..." உதயகுமார் ஆரம்பித்தான். "நீங்கள் இத்தனை பேர் திரண்டு வந்திருப்பதில் எனக்குப் பெரும் மகிழ்ச்சி. நேற்று வரை எனது கொள்கை என்று இருந்ததை இன்று முதல் நமது கொள்கை என்று அறிவிக்கும் மகிழ்ச்சி இது..."

உதயகுமாரின் குரல் கணீர் என்று உடனடியான அதிகாரத்தோடு, மற்றவர்களை அடிமைப்படுத்தும் கம்பீரத்தோடு ஒலித்தது.

"இன்றைக்கு நாடு இருக்கும் நிலையில் லஞ்சமும், படித்த இளைஞர்களுக்கு வேலையின்மையும், பட்டினியும், பஞ்சமும் எட்டு திக்கிலும் ஊடுருவி விட்டன. இவற்றைச் சரி செய்யப் போவது யார்? நாம்தான். எப்படி? சுட்டு விரலில் கரும்புள்ளி வைத்த திருப்தியோடு வோட்டுப் போட்டு அராஜகமான அரசாங்கத்தைத் தேர்ந்தெடுப்பதன் மூலம் அல்ல. நாமே நமது ஆட்சியைப் பரப்புவதன் மூலம். நமக்கு இல்லாதது வேறு யாருக்கும் வேண்டாம்...

எல்லோருடைய கவனமும் தன் மீது படிந்து விட்டதை நிச்சயம் செய்து கொண்டு உதயகுமார் தொடர்ந்தான்:

"நிலையான மன உறுதி இல்லாதவர்கள் நமக்கு வேண்டாம். உடம்பில் வலுவில்லாதவர்கள் தேவையில்லை. வயதான கிழவர்களின் இயலாமையால் நமக்கு எந்த வசதியும் இல்லை. எனவே இன்று முதல் கோழைகளையும், பலவீனமானவர்களையும் நம் தேசத்திலிருந்து ஒழிப்போம். வலுவான இளைஞர்கள் மட்டும் மிச்சமிருக்கட்டும்..."

"நீ வன்முறையைப் போதிக்கிறாய்..."

"குற்றம் சாட்டுவது யார்? இப்படி வர முடியுமா? ஓ, என் இனிய நண்பன் பிரகாஷ்! டியர் பிரகாஷ், நான் வன்முறையைப் போதிக்கவில்லை, நியாயப்படுத்துகிறேன். எத்தனை வருடங்களுக்கு நீ வேலையில்லாமல் இருக்கத் தயார்? உன் தந்தை அறுபது வயதிலும் கணக்கெழுதி வீட்டிற்குச் சோறு போட வேண்டும் என்று ஏன் எதிர்பார்க்கிறாய்? கிழவர்களை விலக்கி விட்டால் இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புப் பெருகி விடும்..."

"நாமும் நாளைக்கு முதியவர்களாகப் போகிறவர்கள் தான்..."

"நமக்காக என் கொள்கை மாறாது, பிரகாஷ். நாளை நம்மில் யாராவது கோழையானாலோ, பலவீனமானாலோ, அவர்களும் வாழும் தகுதியை இழந்தவர்களாவோம்... என்ன சொல்கிறீர்கள், நண்பர்களே...?"

"ஆமாம்... ஆமாம்..."

பிரகாஷ் சற்றே தயங்கி விட்டு, 'ஆமாம்' என்று சேர்ந்து கொண்டான்.

"அழிப்போம்—உருவாக்குவோம்!" உதயகுமார் அடிக்குரலில் சபதம் எடுத்தான்.

இரண்டு நாட்கள் தள்ளி, இரவு. வானத்தில் நிலா மாத ஓய்வில் இருந்தது. கறுப்பு உடைகள் அணிந்து அவர்கள் நிழல்களைப் போல் அந்தச் சாலையில் நுழைந்தார்கள். இரவு விளம்பரமாக நியான் ஒளிர்ந்து கொண்டிருந்த அந்தப் பிரும்மாண்ட டிபார்ட்மெண்டல் கடையை நெருங்கினார்கள். கழிகள், மரத்தடிகள், இரும்புக் குழாய்கள், பெட்ரோல், நெருப்புக் குச்சி — எத்தனை ஆயுதங்கள்!

இருபதாவது நிமிடம் அந்தக் கடைத் தெருவே நெருப்புக் குவியலானது. சைரன்களோடு தீயணைப்பு வண்டிகள் சோம்பலாக வந்து சேர்ந்த போது, குறைந்தது ஆறு கோடி ரூபாய்ப் பொருள்கள் சாம்பலாகியிருந்தன. நெருப்பின் வெளிச்சம் பரவு முன்னர், அழித்தவர்கள் இருட்டில் கலந்திருந்தனர்.

நான்காவது இரவு ஒரு பஞ்சாலை தீப் பிடித்துச் சர்வ நாசமானது.

ஐந்தாவது இரவு ஐம்பது வயதைக் கடந்த மூன்று மந்திரிகளும், காவலுக்கு நின்ற போலீஸ்காரர்களும் உயிரிழந்தனர்.

ஒருபுறம் போலீஸின் வேட்டை தீவிர மாகிக் கொண்டிருக்க, இன்னொரு புறம் புரட்சி வாலிபர் சங்கத்தின் அங்கத்தினர் எண்ணிக்கை பலூன் காற்று போல் பெருகிக் கொண்டேயிருந்தது. மனிதனின் அடிப்படை மிருக குணத்தைத் தூண்டி, உணர்ச்சிவசப்படுத்துவது உதயகுமாருக்கு வெகு எளிதாயிருந்தது.

அண்டை மாநிலங்கள் கவலைப்படத் தொடங்கின. தங்கள் எல்லைகளில் தீவிர மான செக் போஸ்ட்களை நிறுவின. காபி னெட் கூட்டங்களும், சட்டசபை விவாத வெடிப்புக்களும், அத்தனை பத்திரிகைகளின் முதல் பக்கங்களும் புரட்சி வாலிபர் சங்கம் பற்றியே சுவாசம் செய்தன.

"பிரகாஷ், நீங்கள் செய்வது எனக்குக் கொஞ்சம்கூடப்பிடிக்கவில்லை..." ஷைலஜா அவன் மார்புச் சட்டையை உலுக்கினாள். அவள் கண்களில் கோபமும், குரலில் உஷ் ணமும் கலந்திருந்தன. பிரகாஷ் தனது கண் ணாடிகளைக் கழற்றிச் சட்டையில் துடைத்து அணிந்து கொண்டான். அவன் கண்களில் பளபளப்பான நீர்த்திரை.

"ஷைலஜா, பிராமிஸாகச் சொல்கி றேன். எனக்கும் வன்முறையில் சற்றும் விருப்பமில்லை..."

"அப்படியானால் நேற்று நீங்கள் அந்த பஸ்ஸை எரித்தது பொய்யா?" ஷைலஜா வின் அழகான உதடுகள் துடித்தன.

"இல்லை... நான் கட்டாயப்படுத்தப்பட் டிருக்கிறேன்... நான் மட்டும் இல்லை. என்னைப் போல் ஆயிரக்கணக்கான இளை ஞர்கள்..."

"பிரகாஷ்!" பின்னாலிருந்து ஒரு குரல் வேகமாகச் சீறி வந்தது.

"திலீப்!"

"அண்ணா!"

திலீப் தன் சிகரெட்டைக் காலுக்குக் கீழ் போட்டு நசுக்கினான். "ஷைலஜா, நீ போ..."

"அண்ணா, பிரகாஷை நேற்று நான்..."

"நீ போ! போய்விடு!"

ஷைலஜா மிரண்ட கண்களால் திலீப்பைப் பார்த்தாள். பிரகாஷிடமிருந்து அவசரமாக விலகினாள். மரங்களுக்குப் பின்னே ஓடினாள்.

"பிரகாஷ்..." திலீப் அவன் தோளை அணைத்துத் திருப்பினான். "ஏன் சவம் போல் பார்க்கிறாய்? என் தங்கையின் மீது நீ வைத் திருக்கும் காதல் எனக்குத் தெரியும். உன் மேல் அவள் பைத்தியமாக இருப்பதும் தெரி யும். ஆனால் நம் சங்க விஷயங்களைப் பற்றி நீ அவளிடம் கூடப் பேசுவது தவறு, பிரகாஷ்..."



"திலீப்... என்னை விட்டு விடுங் களேன்...வன்முறை ஆபத்தானது. அது ராட்சஸன்... ஏமாந்த சமயத் தில் எஜமானரையே அடித்துவிடும் என்று எங்கோ படித்திருக்கி றேன்..."

"நீ ரொம்பக் குழம்பியிருக் கிறாய்... கமான்..."

"திலீப், யோசித்துப் பார்... நேற்று நம் நண்பர்கள் பத்துப் பேரை அரெஸ்ட் செய்து விட்டார் கள்..."

"அவர்கள் பேசி விடப் போகி றார்களே என்று கவலைப்படுகி றாயா? முட்டாள்! அவர்கள் பேச மாட்டார்கள். வற்புறுத்தப்பட் டால் உயிரையும் தியாகம் செய் வார்களே தவிர, நம்மைக் காட்டிக் கொடுக்க மாட்டார்கள்.... இன் றைக்குக் கூட்டம் இருக்கிறது. மறந்து விடாதே..."

அன்றைக்கு இரவு கூட்டம் முடிந்து புது உத்தரவுகளோடு அத்தனை பேரும் கலைந்து போன பின்னர், உதயகுமாரும், திலீப்பும் மிச்சமிருந்தார்கள்.

"திலீப், நான் கேள்விப்படுவது உண்மையா?"

"என்ன?"

"பிரகாஷும், உன் தங்கை யும்..."

''ஆமாம்...'' திலீப் தலையைக் குனிந்தான்.

''திலீப், நீ நம் கொள்கையை முழுமனத்துடன் நம்புகிறாயா?''

''நிச்சயமாக உதய்...''

''பலவீனமானவர்கள் ஆபத்தானவர்கள், மனத்தில் உறுதியில்லாதவர்கள் எந்த நிமிடமும் நமக்குத் துரோகிகளாக மாறி விடும் அபாயம் இருக்கிறது. ஸோ...''

உதயகுமார் அர்த்தத்துடன் திலீப்பைப் பார்த்தான்.

**ம**லைப்பாதை இருண்டிருந்தது. ஏறி வந்ததில் திலீப்பிற்கும், பிரகாஷிற்கும் மூச்சிரைத்தது.

''திலீப், ரகசியமாகப் பேச வேண்டுமென்றாயே, என்ன?'' பிரகாஷ் இரைக்க இரைக்கக் கேட்டான். அடுத்த வினாடி அவன் கண்களில் கிலி படர்ந்தது. இருட்டிலிருந்து உருவாகி அவனை ஐந்து பேர் சூழ்ந்து விட்டிருந்தார்கள். ஒவ்வொருத்தர் கையிலும் ஓர் ஆயுதம்!

அவனுடைய ஐந்து நண்பர்கள்!?

''பலவீனமானவர்கள் நமது சங்கத்திற்குத் தேவையில்லை பிரகாஷ்'' என்றான் திலீப், காய்ந்து போன குரலில். ஐந்து பேரும் பிரகாஷின் மீது குவிந்தார்கள்.

''**கோ**ழை! எதற்காகவோ ஆசைப்பட்டு, எதற்காகவோ கவலைப்பட்டு வாழ்க்கையில் தோல்விகளைச் சந்திக்கும் தைரியமில்லாமல் மலை உச்சியிலிருந்து குதித்து விட்டான், முட்டாள்'' திலீப் சுவரைப் பார்த்துத்திரும்பிக் கொண்டு சொன்னான்.

''நோ!'' ஷைலஜா கிரீச்சிட்டாள். ஓடி வந்து திலீப்பின் முகத்தைச் சட்டென்றுதிருப்பினான். ''பிரகாஷை நீங்கள் எல்லோரும் சேர்ந்து தீர்த்துக் கட்டி விட்டீர்கள்...'' ஆத்திரம் அவள் தொண்டையில் அழுகையாக வெடித்தது.

''ஷைலஜா... நான் சொல்வதை நம்பு...''

''எங்கே என் கண்ணைப் பார்த்துச் சொல்... உனக்கு உண்மை தெரியுமா அண்ணா? தலைவன் தலைவன் என்று யாரைப் போய் ரகசிய இடத்தில் சந்திக்கிறாயோ, அவனுடைய உண்மை சொரூபம் உனக்குத் தெரியுமா? என்னை அவன் நிழல் போல் துரத்திய போது நான் வேண்டாம் என்று உதறித் தள்ளியது பற்றி உனக்குத் தெரியாது. அந்த ஆத்திரம்தான் இன்று பிரகாஷுக்கு எதிராக உன்னைத் தூண்டி விட்டிருக்கிறது...''

''உளறாதே...உதயகுமாரின் வாழ்க்கையில் காதல் போன்ற அல்ப விஷயங்களுக்கு இடமில்லை...'' திலீப் ஷைலஜாவை ஆத்திரத்தோடு தள்ளிவிட்டு நகர்ந்தான்.

ஷைலஜா சுவரில் சரிந்து தன் அழுகையைத் தொடர்ந்தாள்.

''**தி**லீப், ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்?'' உதயகுமார் தன் சிகரெட்டை அவனோடு

---

## ஸ்ரீ நாராயணதீர்த்தர் ஆராதனை விழா (திருப்பூந்துருத்தி)

இவ்வாண்டு ஸ்ரீ நாராயணதீர்த்தர் ஆராதனை விழா சிறப்பாக 22.2.88 முதல் 24.2.88 முடிய ஸத்குருவின் ஆஸ்ரமத்தில் நடைபெறவிருக்கிறது. விழாவிற்கு திரு. ஜி. செல்வம் நிலைய இயக்குனர், சென்னை வானொலி நிலையம் தலைமை தாங்கவும், பத்ம விபூஷண் ஸங்கீத கலாநிதி டாக்டர் எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் விழாவை துவக்கி குத்துவிளக்கு ஏற்றி வைத்து தரங்கங்களை பாடி இன்னிசை கச்சேரி நிகழ்த்துகிறார்கள். சிறப்பு சொற்பொழிவாளராக திரு. எம். ராமு, மாவட்ட ஆட்சித் தலைவர், தஞ்சாவூர், எழுத்தாளர் திருமதி. சிவசங்கரி, திரு. டி. என். ராமசந்திரன் மற்றும் ஸ்வர்ண வெங்கடேச தீக்ஷிதர் பங்கு கொள்கின்றனர். திருச்சி வானொலி நிலைய இயக்குனர் திரு. எஸ். வேணுகோபால் ரெட்டி அவர்கள் தரங்க வித்யா சாலை மாணவ மாணவிகளுக்கு பரிசுகளை வழங்குகிறார். பத்மஸ்ரீ கே. ஜே. ஜேசுதாஸ், சிக்கில் சகோதரிகள், சங்கீத கலாநிதி பாலக்காடு கே. வி. நாராயணஸ்வாமி, திருச்சூர் வி. ராமச்சந்திரன், கொச்சின் என். பி. ராமஸ்வாமி, திரு. ராஜ்குமார் பாரதி, போழக்குடி திரு. கணேசய்யர், திரு. ஜி. என். தேசிகன், திருமதி பத்மா நாராயணஸ்வாமி, திருமதி சுகந்தா காளமேகம், திருமதி ருக்மணி வெங்கடாசலம் மற்றும் திரு. எம். சந்திரசேகரன், கண்டதேவி. அழகிரிசாமி, கோவை. பாலசுப்ரமண்யம், நாகை. முரளீதரன், ஆனையம்பட்டி. கணேசன், திரு. என். வி. சுப்ரமணியம், தஞ்சாவூர் உபேந்திரன், திருச்சூர் நரேந்திரன், ஸ்ரீமுஷ்ணம் ராஜாராவ், திரு. கே. எம். காளிதாஸ், பி. ராமய்யா, டி. எச். விநாயகராம், காரைக்குடி ராஜாராமன், மன்னை சக்திவடிவேலு, லால்குடி திரு. ஜி. ஜே. ஆர். கிருஷ்ணன், செல்வி. ஜே. விஜயலக்ஷ்மி, ஹரிகதா வல்லுநர்கள் திரு. டி. என். சுப்ரமண்ய பாகவதர், எஸ். ஞானகிராமன், திருமதி டி. ஆர். கமலா மூர்த்தி, திரு. லக்ஷ்மணன் மற்றும் பல கலைஞர்கள் கலந்து கொள்கிறார்கள். விழாவிற்கான ஏற்பாடுகளைக் காரியதரிசி திருப்பூந்துருத்தி வி. வெங்கடேசன், மற்றும் உபதலைவர் ஆர். ப்ரதாப்சிங் காடேராவ், திரு. ஏ. சுப்ரமண்யம் செட்டியார் முதலியவர்கள் கவனித்து வருகிறார்கள். விழாவிற்குத் தாராளமாக நிதி உதவி செய்ய வேண்டுகிறோம். கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பும்படி பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.

விலாசம்: திரு. எல். பாலசுப்ரமண்யம், (பொருளாளர்),
1090, பாபண்ணா சந்து, தஞ்சாவூர் — 613 009.

இங்ஙனம்,

ஸ்ரீ நாராயண தீர்த்த சுவாமிகள் மஹோத்ஸவ கமிட்டியார்.

## நினைவுபடுத்துகிறோம்......

கல்கி, கோகுலம், மங்கையர் மலர் ஆகிய பத்திரிகைகளின் ஆசிரியர் குழுவினர் இந்நாள் வரை நுங்கம்பாக்கத்தில் பணியாற்றி வந்தனர். தற்போது வசதி கருதி, கிண்டியில் அச்சகக் கட்டடத்துக்கே இடம் மாற்றியுள்ளனர். இனி மூன்று பத்திரிகைகளுக்கும் நிர்வாகக் காரியாலயம், ஆசிரியர் குழு அலுவலகம், அச்சகம் ஆகிய எல்லாமே ஒரே இடத்தில் இயங்கும். முகவரி:

ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி,
சென்னை — 600 032.
போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543; 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.



பகிர்ந்து கொண்டே கேட்டான். "நாளைக்கு ரயில் பாதையில் வெடிக்கப் போகும் குண்டைப் பற்றிக் கவலைப்பட ஆரம்பித்து விட்டாயா?"

"இல்லை..." திலீப் இருட்டுக்கு வெளியே வெறித்தான்.

"திலீப்... நீ நாளைக்கு வெளியூர் போகிறாய். திரும்பி வர ஒரு வாரம் ஆகலாம்..."

"ஆமாம்..."

"ஷைலஜா தனியே இருப்பாளா, திலீப்?"

"இருந்து தானே ஆக வேண்டும், உதய்?"

"எனக்கு உன்னிடம் எப்படி ஆரம்பிப்பது என்று தெரியவில்லை, திலீப்... ஷைலஜாவை நான்..."

"நீ?"

"மற... அதை இன்னொரு நாள் பேசுவோம்..."

"பரவாயில்லை, சொல் உதய்..." திலீப் சிகரெட் வெளிச்சத்தையும் காலுக்குக் கீழ்ப் பாழாக்கினான்.

"நான் ஷைலஜாவை... ஐ லவ் யுவர் சிஸ்டர் திலீப்!"

"ஷைலஜாவைப் பற்றி உனக்குப் பூரணமாகத் தெரியுமா உதய்? வன்முறையும், கோபமும் அவளுக்கு என்றைக்குமே சம்மதமான விஷயங்களில்லை..."

"ஐ நோ தட்... நம் சங்கத்தின் நடவடிக்கைகள் பற்றி அவளுக்கு ஏன் சொல்லப் போகிறோம்? தவிர, வன்முறையிலும், மற்ற நடவடிக்கைகளிலும்,, நான் என்றைக்கும் நேரடியாக ஈடுபடுவதில்லையே திலீப்..."

திலீப்பின் முகம் இருட்டில் கடுமையானதை உதயகுமார் பார்க்க வாய்ப்பில்லை.

"ஷைலஜாவின் விருப்பத்தைக் கேட்க வேண்டும் உதய்."

"அவளுக்கு என்று என்ன விருப்பம்? அவள் ஆசைப்பட்ட அந்த அல்பப் பயலும் இப்போது உயிரோடு இல்லை. தனியாக எத்தனை நாள் அவள் அவஸ்தைப்பட முடியும்? நீ எடுத்துச் சொன்னால் கேட்பாள் திலீப். அதற்குப் பின் நம் சங்கத்திற்கு நீ தான் தளபதி..."

உதயகுமார் வாக்கியத்தை முடிக்கு முன் திலீப் அவன் மீது பாய்ந்திருந்தான். ஆக்ரோஷமாக அவனைச் சுவரோடு தேய்த்து அவன் கழுத்தில் கத்தியைப் பாய்ச்சினான்.

"பதவி ஆசை காட்டி என் தங்கையையே விலை பேசுகிறாயாடா, ராஸ்கல்? உனக்கெல்லாம் ஒரு கொள்கை. தலையாட்டிப் பொம்மைகளாக ஒரு தொண்டர் படை...! போ, ஒழிந்து போ!"

திலீப் ரத்தம் சொட்டும் கத்தியோடு இருட்டிலிருந்து வெளிப்பட்டான். அருகிலிருந்த போலீஸ் ஸ்டேஷனை நோக்கி நடந்தான். வீதியில் ஆயிரக்கணக்கான பிரகாஷ்கள் நின்று கொண்டு இரைச்சலான குரலில் அவனைப் பார்த்துக் கத்துவது போலிருந்தது:

"வன்முறை ஒரு ராட்சஸன்.. ஏமாந்த சமயத்தில் எஜமானரையே அடித்து விடும்!"

— ஜெயமன்மதன்

இரைப்பட விழாவின் துவக்கப் படமான WHITE MISCHIEF- கதையும் சதையும் நிறைந்த படம். இதனை ஆரம்பப் படமாகத் தேர்ந்தெடுத்ததன் மூலம் இந்தியா அவமானப்பட்டு நிற்கிறது என்ற ரீதியில் மிருணாள் சென் பிறகு அறிக்கை விட மத்திய அரசுத் துறைக்கு எதிரான எந்த அறிக்கையும் கேரள மாநில சினிமா வளர்ச்சித் துறைக்கு வெல்லமாயிற்றே— மிருணாள் சென்னின் அறிக்கையை வெற்றிலை பாக்கு வைத்து வாங்கிக் கொண்டு விநியோகம் செய்து விட்டது.

திரைப்பட விழா இயக்குநர் ஊர்மிளா குப்தா உடனே எதிர் அறிக்கைவிட, காகிதப் போர்!

இதன் விளைவு, மிருணாள் சென்னின் GENESIS என்ற திரைப்படம் பிரதான பிரிவிலிருந்து ஆள் அரவமற்ற வேறு தியேட்டருக்கு மாற்றப்பட்டது. இதற்கு அரசுத் தரப்பில் நொண்டிச் சாக்குகள் கொடுக்கப்பட்டன.

கலை உலகையும் எப்படி அரசியல் ஆட்டிப் படைக்கிறது!




# N.S.K.

## சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்

# 6வது ஆண்டு விழா 16-2-88

6வது ஆண்டுவிழாவையொட்டி புதிய குருப்புகள்
தொடங்கப்படுகின்றன. சிறப்பு பரிசுகளும் வழங்கப்படுகின்றன.

## புதிய குரூப்புகள்

| | |
|---|---|
| 250 x 20 | 5000 |
| 125 x 40 | 5000 |
| 500 x 20 | 10,000 |
| 250 x 40 | 10,000 |
| 1000 x 25 | 25,000 |
| 500 x 50 | 25,000 |

| | |
|---|---|
| 1250 x 40 | 50,000 |
| 2000 x 50 | 1,00,000 |
| 100 x 100 | 10,000 |
| 250 x 100 | 25,000 |
| 500 x 100 | 50,000 |
| 1000 x 100 | 1,00,000 |

**இலவச பரிசுகள் (15-1-88 to 29-2-88)**

5000 — எவாசில்வர் கிண்ணம்
10000 — எவர்சில்வர் குடம் மூடியுடன் (சிறியது)
25000 — வெள்ளி விளக்கு (அ) எவர்சில்வர் குடம்
50000 — வெள்ளி விளக்கு (அ) பிஷர் பான்
100000 — குவார்ட்ஸ் சுவர்க் கடிகாரம் (அ) எவர்சில்வர்

**விசேஷ சலுகை:**

★ இலவச பரிசுகள் புதியதாகச் சேரும் அங்கத்தினர்களுக்கும், புது அங்கத்தினர்களை அறிமுகப்படுத்தும் N.S.K.யின் பழைய அங்கத்தினர்களுக்கும் வழங்கப்படும்.

★ ஒரே குரூப்பில் 10 அங்கத்தினர்களை சேர்ப்பவர்களுக்கு 3வது மாதமே சீட்டுப் பணம் முன்பணமாக அளிக்கப்படும்.

★ சீட்டுப்பணம் 20 நாட்களுக்குள் பட்டுவாடா செய்யப்படும்.

★ ரூ. 50000 சீட்டு வரை சம்பள சான்றிதழ் பேரில் சீட்டுப் பணம் வழங்கப்படும்.

**போனஸ்:** மாதம் தவறாமல் ஏலத் தேதிக்குள் பணம் செலுத்துவோருக்கு சீட்டின் முடிவில் கட்டிய தொகையில் 1% போனஸாக வழங்கப்படும்.

**N.S.K. சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்**
38-B, பர்கிட் சாலை (2வது மாடி), தி. நகர், சென்னை-600 017
தொலைபேசி எண்: 442950 445252

அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்

EXELADS/NSK 019/88

"அண்ணே, பழனியண்ணே, சூபர்வைஸர் வர்ரூரு."

தொழிற்சாலை வாசலில், சூபர்வைஸரின் தலையைப்பார்த்தவுடன் அவசர அவசரமாக, மெல்லிய குரலில் பழனியை எச்சரித்தான் குமாரவேல்.

ஆனால், பழனி குமாரவேலுவின் எச்சரிக்கையைக் காதில் வாங்காதவன் போல், "இங்கே புகை பிடிக்கக் கூடாது" என்று எழுதப்பட்டிருந்த போர்டுக்கு நேர் கீழே நின்றபடி, 'குப், குப்' என புகைத்துக் கொண்டிருந்தான்.

குமாரவேலுக்கு மனம் திக் திக் என்று அடித்துக் கொண்டது. 'சூபர்வைஸர் நிச்சயம் பழனியைத் திட்டப் போகிறார்'.

ஆனால், பழனி இருந்த பக்கமே தலையை திருப்பாமல் நேராக சூபர்வைஸர் சென்று விட்டதைக் கண்டதும் குமாரவேலுக்கு ஆச்சரியமாயிருந்தது.

'நல்லவேளை. பழனி அவர் கண்களில் படவில்லை' என்று அவன் நினைத்துக் கொண்டிருந்த போது,

கடகடவெனச் சிரித்தபடி, குமாரவேலுவின் அருகே வந்தான் பழனி.

"என்னடா பாக்கறே? சூபர்வைஸர் என்னை ஒண்ணுமே கேக்கலையேன்னு? அவரு என்ன, அந்த ஜி. எம்.மே வந்தாக்கூட ஐயாவை அசைக்க முடியாது" என்றவன், "இப்ப ஒரு வேடிக்கை பாக்கறியா?" என்றபடி, "என்ன சூபர்வைஸரு. இங்கே ஒரு மனுஷன் நிக்கறேன். கண்டுக்காம போறியே, நியாயமா?" என்று சூபர்வைஸரையே வம்புக்கு அழைத்தான். அப்போதும் அவன் கையில் சிகரெட் புகைந்து கொண்டிருந்தது.

"ஹி... ஹி... உன்னைப் பாக்கலே பழனி..." என்று அசடு வழிந்தபடி தலையைத்

# சுயமரியாதை

சத்யா ஸ்ரீனிவாசன்



திருப்பிய சூபர்வைஸர், "நல்லாயிருக்கியா?" என்றார்.

"நல்லாயிருக்கியான்னு சும்மா கேட்டா எப்படி? ஒரு ஐஞ்சோ, பத்தோ கையிலே கொடுத்து, 'போய் டிபன் சாப்டுட்டுவா'ன்னு மருவாதை!" — என்று பழனி நக்கலாகச் சொன்னதும்,

"ஹி... ஹி... இன்னும் டிபன் சாப்டலேயா? இந்தா... போய் முதல்லே சாப்பிடு. வேளா வேளைக்கு நல்லாச் சாப்டுட்டு உடம்பைக் கவனிச்சுக்கணும்...." என்று மேலும் அசடு வழிந்தபடி ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை சட்டைப் பையிலிருந்து எடுத்து நீட்டினார்.

அதை சர்வ அலட்சியமாகப் பெற்றுக் கொண்ட பழனி, குஷியாக விசிலடித்தபடி வெளியேறினான்.

குமாரவேலுக்குக் குழப்பமாயிருந்தது. 'என்னடா இது. கண்டிக்க வேண்டிய சூபர் வைஸர் இப்படி குழையுறாரே, அது ஏன்?'

குமாரவேலு அந்தத் தொழிற்சாலையில் புதிதாக வேலைக்குச் சேர்ந்தவன். அவனுக்குப் பழனியைப் பற்றி ஒன்றும் தெரியாது.

அன்று உணவு இடைவேளையின் போது தெரிய வைத்தார்கள் சக தொழிலாளிகள்—

"அவன் பெரிய பேட்டை ரௌடிப்பா.



அவனைப் பாத்தாலே சூபர்வைஸருங்க, ஆபீஸருங்க எல்லாம் பயந்துப்பாங்க. யூனியன்லே ரொம்பச் செல்வாக்கு. தலைவருக்கு ரைட் ஹாண்டு மாதிரி..." என்று சொன்னவர்கள் கொஞ்ச நாட்களுக்கு முன்பு ஜி. எம். க்கு ஏற்பட்ட அவமானத்தையும் விளக்கினார்கள்

ஒரு தடவை ஜி. எம். பேக்டரி ரவுண்டுக்கு வந்தப்போ, பழனி மிகவும் அழுக்கான யூனிபாரம் போட்டிருந்தானாம். 'ஏம்பா, உன் யூனிபாரம் இவ்வளவு அழுக்கா இருக்கு'ன்னு ஜி. எம். கேட்டதும் பழனி கொஞ்சம் கூட பயமோ மரியாதையோ இல்லாமல், 'என்ன ஸார், கொஞ்சம் கூட மருவாதை இல்லாமே பேசறே? நீயும் என்னைப் போல் இங்கே சம்பளம் வாங்கற ஆளுதான், ஞாபகம் வச்சுக்கோ! என்னமோ நாலு எழுத்து இங்கிலீஷ் படிச்சே; டைரக்டருங்க கால்லே வுளுந்தே; அத்தொட்டு ஜி. எம். ஆயிட்டே. சும்மா போவியா?' என்று சத்தம் போட்டானாம். அதற்குப் பிறகு ஜி. எம். பேக்டரி பக்கமே வர்றதில்லையாம்.

'அடேயப்பா, பழனிக்கு அவ்வளவு தைரியமா?' அவன் மேல் மரியாதை உருவாகியது குமாரவேலுக்கு.

மாலையில் வேலை முடிந்து வீடு திரும்பும் போது, பழனியிடம் சென்று, "வணக்கம் அண்ணே, வர்றேன்..." என்று சொல்லிக் கொண்டான்.

"தோ, பார் குமாரவேல், நீ இப்பத்தான் புச்சா சேர்ந்திருக்கே. யாருக்கும் பயப் படாதே. ஆபீஸர், சூபர்வைஸர் எல்லாரும் நம்பளைக் கண்டு பயப்படற மாதிரி நாம்ப இருக்கணும். நம்ப சுயமரியாதையை விட்டுக் குடுக்கவே கூடாது. தெரியுதா?" என்றவன், "நாளைக்குச் சாயங்காலம் வா, யூனியன் ஆபீஸுக்குக் கூட்டிட்டுப் போறேன். தலைவரைக் கண்டுக்கலாம். அப்பாலே கொஞ்ச நாள் நம்பகிட்டே 'ட்ரெயினிங்' எடுத்துக்கோ; அப்பாலே பாரு, ஜி. எம். கூட உனக்குச் சலாம் வைப்பான்..." என்றபடி குமாரவேலுவின் முதுகில் தட்டி, தைரியம் சொல்லி அனுப்பி வைத்தான்.

'சுயமரியாதை' — குமாரவேலுக்குப் பழனியை மிகவும் பிடித்துப் போய்விட்டது.

மறுநாள் மாலை.

பழனியுடன் யூனியன் ஆபீஸுக்குச் சென்றான் குமாரவேலு.

"இங்கேயே இரு. நான் போய் முதல்லே தலைவரைப் பார்த்துட்டு வந்துடறேன்" என்று குமாரவேலுவை வாசலிலேயே நிற்க வைத்துவிட்டு உள்ளே போனான் பழனி.

வெகு நேரமாகியும் பழனி வராமல் போகவே, மெதுவாக அலுவலகத்திற்குள் எட்டிப் பார்த்தான் குமாரவேலு.

அங்கே அவன் கண்ட காட்சி...

நடு ஹாலில் சுழல் நாற்காலியில் அமர்ந்தபடி, ஒரு கையில் போனும், ஒரு கையில் சிகரெட்டுமாகக் காட்சியளித்தார். யாருடனோ போனில் சாவகாசமாகப் பேசிக் கொண்டிருந்தார். அவரைச் சுற்றி, நிறையப் பேர் நின்று கொண்டிருந்தார்கள். இருக்கைகள் நிறைய இருந்தும், யாரும் உட்காராமல் நின்று கொண்டிருந்தது ஏன் என்று குமாரவேலுக்குப் புரியவில்லை. அவன் கண்கள் பழனியைத் தேடின. சற்றுத் தள்ளி, ஓர் ஓரமாக, தலைவர் பார்வை படும் இடத்தில் கைகளைக் கட்டிக் கொண்டு பவ்யமாக நின்று கொண்டிருந்தான் பழனி. அந்த நிலையில் பழனியைப் பார்த்ததும் குமாரவேலுக்கு

என்னவோ போல் ஆகிவிட்டது.

போன் பேசி முடித்த தலைவர், முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொண்டு, "ஏம்பா, நடராஜன், அந்த டொனேஷன் விஷயம் என்ன ஆச்சு? யாராவது கவனிச்சீங்களா? இல்லே, எல்லாரும் தூங்கிட்டீங்களா?" என்று யாரையோ அதட்டலாகக் கேட்டார். அந்தச் சமயம்,

"தலைவரே, வணக்கம்!" என்று மெதுவாகக் குரல் கொடுத்தான் பழனி.

அடுத்த கணம்,

"யாருடா அது, நேரம் காலம் இல்லாம வணக்கம்னு? நான் ரொம்ப முக்கியமான விஷயம் பேசிக்கிட்டிருக்கேன். தெரியுதில்லே?" என்று தலைவர் எரிந்து விழுந்ததும்,

"ஏம்பா, உனக்குக் கொஞ்சமாவது அறிவிருக்கா? தலைவர் 'மூடை' கெடுத்துட்டியே..." என்று சில்லறை தேவதைகள் சிலவும் பழனியைச் சாடின. தலைகுனிந்தபடி நின்றான் பழனி.

பார்த்துக் கொண்டிருந்த குமாரவேலுக்கு என்னவோபோல் ஆகிச் சங்கடமாயிருந்தது.

அப்போது, திடீரென மின்சாரம் தடைப்பட, தலைவர் 'உஸ்' என்றபடி மேல் துண்டால் விசிறிக் கொள்ள ஆரம்பித்தார்.

உடனே பழனி, இரண்டடி முன்னுக்கு வந்து, மேஜையின் மேல் இருந்த விசிறியை எடுத்து விசிறத் தொடங்கினான்.

சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்ட தலைவர், அப்போதுதான் பழனியைக் கவனித்தவர் போல, "என்ன பழனி, எங்கே வந்தே?" என்று கேட்டுவிட்டுத் திடீரென ஏதோ நினைவுக்கு வந்தவராக, "ஆமா, என்ன நீ, மூணு நாளா வீட்டுப் பக்கமே வரலியாம்...? என்னுடைய வேஷ்டி சட்டையெல்லாம் அப்படியே மூட்டை மூட்டையா இருக்குது. நாயும் நாலு நாளா யாரும் குளிப்பாட்டாம அப்படியே இருக்குது. மார்க்கெட்டுக்குப் போய்வர, நீ வரலேன்னு என் 'வொய்ப்' கோவிச்சுக்கறா. நீ ஏன் வரலே?" என்று கோபமாகக் கேட்டதும்,

"மன்னிச்சுடுங்க தலைவரே! இப்பவே போய் காய்கறி வாங்கியாந்து கொடுத்துடறேன். நாளைக்குக் காலம்பற வந்து, துணியையெல்லாம் துவைச்சுப் போட்டுட்டு, நாயையும் குளிப்பாட்டிடறேன். குழந்தைக்கு உடம்பு சரியில்லேங்க. அதான் வர முடியல..." என்று பழனி அடிபணிந்ததும் சற்று சாந்தமடைந்த தலைவர், "என்ன விஷயமா வந்தே?" என்றார்.

"ஒரு பையன் புதுசா நம்ப பேக்டரியிலே சேர்ந்திருக்கான். அவனையும் நம்ப சங்கத்திலே சேர்க்கலாம்னு கூட்டியாந்திருக்கேன்" என்றான் பழனி.

"அப்படியா! ரொம்பச் சந்தோஷம். அந்தப் பையனையும் உன்னை மாதிரி விசுவாசமா நடந்துக்கப் பயிற்சி கொடு, என்ன?" என்ற தலைவர், "போய்ப் பையனைக் கூட்டியா..." என்றார்.

"சரிங்க தலைவரே!" என்று தலையாட்டிவிட்டு, பழனி வெளியே வந்தபோது...

குமாரவேலு அங்கே இருக்கவில்லை.

---

## நிற்க நிழல் வேண்டும் — வாசகர்கள் சொல்கிறார்கள்!

* இலங்கைப் பிரச்னையைப் பிரபு, சீலியா, ஜயசீலன் போன்ற மறக்க முடியாத கதாபாத்திரங்கள் வாயிலாகப் புரிய வைத்த வாஸந்தியின், "நிற்க நிழல் வேண்டும்" கதை என்றும் நினைவில் நிற்கும். சரித்திரமாகப் போகும் நாவல் தந்த அவருக்குப் பாராட்டுக்கள்.

கோவை. உமார்த்தி.

* இலங்கைப் பிரச்னையைப் பற்றிய தவறான கருத்துக்களை மனத்தில் கொண்டிருந்த தமிழ் மக்களைத் தெளிவான கவிதை வரிகளால் திருப்தியான நிலைக்குத் திருப்பிவிட்ட பெருமை 'நிற்க நிழல் வேண்டும்' கதைக்கு உண்டு.

தஞ்சை மாவட்டம். ஜி. கே. ராஜூ

* 'புகை மண்டலம் தேசியச் சின்னமாகவும், வெடிச் சத்தங்களே தேசிய கீதமாகவும் அங்கீகரிக்கப்பட்டு விடுமோ' என்ற வரிகள், பிரபுவுக்கு மட்டுமல்ல, அனைவருக்குமே ஞாபகம் வரும் வரிகள்தாம்.

சென்னை — 33. எஸ். ராம்கோபால்.



* 'நிற்க நிழல் வேண்டும்' கதையைப் பரபரப்பான தொடர்கதை எனக் குறிப்பிட்டிருந்தீர்கள். அது தவறு. கதை அல்ல அது; நெஞ்சை நெகிழவைக்கும் உண்மைகளையே கல்கி வாசகர்களுக்கும், இலங்கைவாழ் சகோதர சகோதரிகளுக்கும் நேரில் காண்பது போல் கண்முன் கொண்டு வந்து நிறுத்தியுள்ளார் வாஸந்தி. ஜயசீலனையும், சீலியாவையும் போல் எத்தனை ஆயிரம் பேர் அமைதியை விரும்பித் தங்கள் சுகங்களைத் தியாகம் செய்தார்களோ! இலங்கை — இந்திய ஒப்பந்தத்தை நிறைவேற்றவும் வன்முறைகளும், தீவிரவாதமும் நீங்கி ஜனநாயக அரசு அமையவும் நாம் இறைவனை வேண்டுவோம்!

திருவண்ணாமலை. ஆர். மோகன்.

* ஜயசீலன், சீலியா ஜோடியை இணைத்தாற்போல் இணைத்துக் கடைசியில் ஜயசீலனைக் கொன்று, சீலியாவைத் தவிக்க விட்டுவிட்ட வாஸந்தியின் மீது வருத்தமும், கதைக்கு நல்ல முடிவைத் தர இயலாமைக்குக் காரணமானவர்களின் மீது அளவில்லாத வெறுப்பும் ஏற்பட்டு, பிரபுவின் சோகம் நம்மையும் சூழ்ந்தது.

சேலம் — 7. எஸ். அருள்மொழி.

* ஈழத் தமிழர்களின் உள்ளத்து உணர்வினை இத்தனை யதார்த்தமாய், மனத்தை நெகிழச் செய்யும் விதத்தில் எப்படி இவரால் எடுத்துரைக்க முடிந்திட்டது என வியந்து போனேன்! ஈழத் தமிழர்களின் பிரச்னைகளை முழுமையாகப் புரிந்து கொள்ள நினைக்கும் ஒவ்வொருவரும் இந்த நாவலைப் படிக்க வேண்டும் என்பதே எனது கருத்து.

எஸ். சையது முஹம்மது.
போடி.

# தமிழகம் தேய்கிறது; ஓட்டை விழுகிறது!




தொழில் முன்னேற்றத்தில் தமிழகம் 1960—ம் ஆண்டுகளில் முன்னணி வரிசையில் இருந்து வந்தது. எழுபதுகளில் தேயத் தொடங்கியது. இன்றோ, தேய்ந்து தேய்ந்து ஓட்டை விழுந்த பாத்திரமாகவே ஆகி விட்டது. 1960—ல் நாட்டின் மொத்த தொழில் உற்பத்தியில் 16.5 சதம் தமிழகத்தில்தான் நடந்தது. அன்று மகாராஷ்டிரம், மேற்கு வங்கம் ஆகியவற்றை அடுத்துத் தமிழகம் மூன்றாவது இடத்தைப் பெற்றிருந்தது. எழுபதுகளில் வளர்ச்சி வேகம் குன்ற ஆரம்பித்தது. உற்பத்தி அளவில் குஜராத் வெகு சீக்கிரமே தமிழ் நாட்டை முந்திக் கொண்டது. 78—79ல் தமிழகம் ஆறாவது இடத்துக்குத் தள்ளப்பட்டது. இன்றோ, தொழில் முன்னேற்றத்தில் தமிழகம் மற்றப் பல மாநிலங்களுக்குப் பின்னால் பதின்மூன்றாவது இடத்தில்தான் இருக்கிறது!

இந்தக் குறைந்தபட்ச முன்னேற்றமும் சிமெண்ட், இரும்பு, எஃகு போன்ற ஆதாரத் தொழில்களில்தான் நடந்திருக்கிறது. மக்கள் விரும்பி வாங்கும் பலவிதப் பொருள்களின் உற்பத்தி அளவு மிகவும் ஏமாற்றமளிப்பதாகவே உள்ளது.

தொழில முன்னேற்றத்துக்கு இங்கு பெரும் தடையாக இருப்பது மின்சாரப் பற்றாக் குறைதான். மின்சாரம் கிடைக்கின்ற அளவை விடத் தேவை மிக அதிகமாக உள்ளது. எதிர்கால மின்சாரத் தேவைகளை மனத்தில் வைத்துக் கொண்டு, மாநில அரசுகள் திட்டங்கள் தீட்டவே இல்லை. தவிர, இருக்கின்ற மின் நிலையங்களிலும் மின் உற்பத்தி சரிவர நடப்பதில்லை. இதற்கு இரு முக்கிய காரணங்கள், அனல் மின் நிலையங்களுக்கு நிலக்கரி சப்ளை சரியில்லாததும் அனல் மின் நிலையங்கள் சரியாகப் பராமரிக்கப்படாததும் ஆகும்.

தமிழகத்தில் ஆங்காங்கே தீவுகள் போல் தொழில் கேந்திரங்கள் உருவாகி அங்கு மட்டும் தொழிலாளர்களின் வருமானம் அதிகரித்துள்ளது.

மத்திய அரசின் முதலீடு தமிழகத்தில் படிப்படியாகக் குறைந்து கொண்டே வந்திருக்கிறது. 70—71ல் அகில இந்தியாவிலும் மத்திய அரசு செய்த முதலீட்டில் எட்டு சதம் தமிழகத்துக்குக் கிடைத்தது. 83—84ல் இது 5.5 சதமாகக் குறைந்து போயிற்று.

தமிழகம் இதர மாநிலங்களுடன் போட்டி போட்டுக் கொண்டு முன்னேற வேண்டுமானால் ஒரு புதிய பாதை வகுக்கப்பட வேண்டும். ஒரு புதிய வேகம் பிறந்தாக வேண்டும்.

மேற்படி கருத்துக்கள் எல்லாம் தென் இந்திய தொழில் வர்த்தக சங்கத்தின் பவழ விழா மலரில் காணப்படுகிறவை.

சென்னை ஷேர் மார்க்கெட்டை நன்கு அறிந்த ஒருவர், பங்கு பேரங்களில் எண்பது சதவீதம் சில குறிப்பிட்ட பங்குகளிலேயே நடக்கிறது என்கிறார். பின்வரும் நிறுவனங்களின் ஷேர்களை வாங்குதலும் விற்பதும் நிறையவே நடக்கின்றன. அசோக் லேலண்ட்; ஈ.ஐ.டி. பாரி, இந்தியா சிமெண்ட்ஸ்; லார்ஸன் டூப்ரோ; மெக்டொவல்; தமிழ்நாடு பெட்ரோ; பாண்ட்ஸ்; மதுரா கோட்ஸ்; ரேவதி ஸி.பி. முதலியன.

தமிழகத்தில் தொழில்வள முன்னேற்றம் கடந்த பல ஆண்டுகளாகவே மிகவும் பின் தங்கிய நிலையில் இருந்தாலும் சில பிரபலமான குரூப் நிறுவனங்கள் வளம் பெற்றுத் தங்கள் நடவடிக்கைகளைப் பரவலாக்கித் தொழில் முன்னேற்றத்துக்கு உதவியுள்ளன. அவையாவன: டி.வி.எஸ்., சக்தி., அமால்கமேஷன்ஸ்; டி. ஐ.; லக்ஷ்மி மில்ஸ்; எம். ஆர். எஃப்.; கோத்தாரி; எல் ஜி; ஸ்பிக் முதலியன. இவற்றின் ஷேர் மதிப்பு ஸ்திரமாக அல்லது ஏறுமுகமாக உள்ளன.

அரசின் கவனமின்மையால் தமிழ்நாடு ஒரேயடியாகத் தொழில் துறையில் அடிமட்டத்துக்கே போய் விடாமல் காப்பவை, இறம்பட இயங்குகிற தொழிலகங்களே. இத்தகைய ஒவ்வொரு தொழில் நிறுவனத்துக்கும் தமிழக மக்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

— வி. கோபாலன்



அடங்கிய வாரிசு!



இலவு காக்கும் கிளி!

* ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்.

? ராணி அண்ணாதுரையின் செல்வாக்கை விரும்பாத திராவிட பாரம்பரியக் கட்சிகள் ஜானகி ராமச்சந்திரனுக்கு மட்டும் செல்வாக்கைத் தேடித் தரும் முயற்சியில் ஈடுபடும் மர்மம் என்ன?

! எம்.ஜி.ஆரைப் போல் அண்ணாதுரை சொத்துக்களை ஏராளமாய் வைத்து விட்டுச் செல்லவில்லையே!

* ப. சுகுமார் ராஜ், தூத்துக்குடி — 1.

? வரும் தேர்தலில் எந்தவொரு கட்சிக்கும் வாக்களிக்கக் கூடாது என்று இருக்கிறேன். நீங்கள் எப்படி?

! பலர் இப்படி விரக்தியோடு இருப்பதால் தான் கள்ள வோட்டுக்கள் பெருகுகின்றன. எனவே, வாக்குச் சீட்டை வாங்கி மனச்சாட்சிப்படி யாருக்காவது வோட்டளிப்பதே புத்திசாலித்தனம்.

வளர்த்துக் கொள்ளவே படம் உதவ வேண்டுமே தவிர அரசியல் ஆதாயங்களுக்கு அதனைப் பலிகடா ஆக்கக் கூடாது. இந்த மனப்பான்மையை வளர்த்துக் கொண்டே போனால் இலக்கியம் நாடகம் எல்லாம் செழிக்காது. அந்தக் காலகட்டத்தில் இரு தரப்பிலும்தான் தவறுகள் நடந்திருக்கின்றன. படம் ஒருதலைப்பட்சமாக இருக்கிறது என்பது மற்றொரு வாதம். இந்த வாதத்தில் உண்மையில்லை என்று நீதிமன்றத் தீர்ப்பே வெளியாகியுள்ளது. தமஸில் ஆர். எஸ். எஸ்.ஸும் ஆரிய சமாஜமும் தனிமைப்படுத்தப்பட்டு இழித்துரைக்கப்படுவதாக மூன்றாவது வாதம். இப்படிப்பட்ட வசனங்களை

# சிதம்பரத்தில் நடந்த பால்ய விவாகம் பற்றி...?

* ரேவதிப்ரியன், ஈரோடு — 1.

? டி.வி. யில் 'தமஸ்' தொடர் பற்றித் தங்கள் அபிப்பிராயம்?

! அது இந்திய சுதந்திரத்தோடு ஒட்டி நடந்த பாகிஸ்தான் பிரிவினை — ஹிந்து — முஸ்லீம் கலவரங்கள் பற்றிய படம் என்பதால் அனைவரும் மறந்துவிட்ட அந்தக் கசப்பான நிகழ்ச்சிகளை மறுபடியும் நினைவுபடுத்துவானேன் என்பது சிலரது வாதம். நடந்து முடிந்த நிகழ்ச்சிகளைச் சுயவிமர்சனம் செய்து கொண்டு ஒரு புதிய உறவை





வரலாறு குப்பைத் தொட்டியா?

அல்லது காட்சிகளை நீக்கிவிடுவதோ மாற்றி அமைப்பதோ பெரிய விஷயமல்ல. ஜனநாயகம் என்பது பிடிவாதங்களால் பலவீனமடையும். ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பதால் பலப்படும்.

* எஸ். வெங்கடேசன், காஞ்சி.

? வெளியூருக்குச் செல்லும் போது வீட்டைக் கவனித்துக் கொள்ளும்படி காவல் நிலையத்தில் சொன்னால், அதற்குப் பணம் ஏதும் கட்ட வேண்டுமா?

! தேவையில்லை. பல சினிமாத் தியேட்டர்களில் அப்படிச் சொல்லிவிட்டுச் செல்லும்படி ஸ்லைடுகள் போட்டு விளம்பரப்படுத்தினாலும், மக்களில் பெரும்பாலோர் அப்படிச் செய்வதில்லை. முதலாவது காரணம் அந்த அளவுக்குக் கல்வியறிவு வளரவில்லை. இரண்டாவது காரணம், இன்னமும் நம் நாட்டில் போலீஸாருக்கும் பொது மக்களுக்கும் இடையிலான உறவில் அச்சம் தவிர்த்த

தோழமை இல்லாமை. இரண்டாவது காரணத்தைக் களைய ஒவ்வொரு போலீஸ்காரரும் முன்வர வேண்டும்.

* பி. ராஜசேகர், மதுரை — 14. *

**? தீவிர அரசியல்வாதிகளை ஆளுனர்களாக நியமிக்கக் கூடாது என்ற சர்க்காரியா கமிஷன் சிபாரிசு நடைமுறைப்படுத்தப் படுமா?**

! பொதுவாகவே கமிஷன் அறிக்கைகளின் சாதகமான அம்சங்களை மட்டுமே அரசு ஏற்றுக் கொள்ளும்; சங்கடமான அம்சங்களைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடும். அதனால்தான் நூற்றுக்கணக்கான கமிஷன் அறிக்கைகள் தூசுப் போர்வையின் கீழ் தூங்குகின்றன. ஆளும் கட்சியின் ஓய்ந்து போன, அல்லது தலைவலி தருகிற தலைவர்களுக்கு ஆளுனர் பதவி தந்து திருப்திப் படுத்தி அனுப்பி விடுகிற வழக்கம் மாறாது. தீவிர அரசியல்வாதிகள் மட்டுமல்ல, தீவிர செலவாளிகளும் ஆளுனராகலாம் என்று குமுத்பென் ஜோஷி வழிகாட்டியிருக்கிறார்.

* ஆர். ராஜா, சீர்காழி.

**? 'இதய தெய்வம் எம்.ஜி.ஆரைக் கேவலப் படுத்தும் அடங்காப் பிடாரி ஜெயலலிதா' என்று ராகவானந்தம் வர்ணித்துள்ளது பற்றி?**

! உள்ளதற்குள் குற்றமற்ற வர்ணனையை வைத்துக் கேள்வி கேட்டிருக்கிறீர்கள். இரண்டு கோஷ்டியினரும் ஒருவரையொருவர் ஏசிக் கொள்ளப் பயன்படுத்தும் அசிங்கமான வார்த்தைகளைக் கேட்கும் போது தமிழர் நாகரிகம் பற்றியே சந்தேகமாக இருக்கிறது. தன்மானத் தமிழனுக்குத் தலைகுனிவை ஏற்படுத்துகிறது.

* டி. மகேஷ், விரராக்கியம்.

**? 'வானளாவிய அதிகாரம்' என்றால் என்ன?**

! சட்டசபை சபாநாயகர், சில சூழ்நிலைகளில், நடுநிலையில் நின்று தாமாகவே சில முடிவுகளை எடுக்க அதிகாரம் வழங்கப் பட்டிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. நமது அரசியல் சாசனத்தை வகுத்த பெரியோர்கள் அப்படித்தான் வகுத்திருக்கிறார்கள். ஆனால் அந்த 'வானளாவிய' அதிகாரங்களை இப்படி சுயவிருப்பு, வெறுப்புகளுக்காக ஒரு சபாநாயகர் பயன்படுத்துவார் என்று அவர்கள் கனவிலும் நினைத்திருக்க மாட்டார்கள். அதிகாரங்கள் அதிகமாக அதிகமாக ஒருவருக்குப் பணிவும் பொறுமையும் கூடவே அதிகரித்துக் கொண்டு வர வேண்டும். அப்படிப்பட்டவர்களையே அப்பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கவும் வேண்டும். வி.எஸ். கூறியது போல் சபாநாயகர் சட்டசபையின் இதயம்தான். ஆனால் இந்த இதயம் பழுதுபட்டுப் போயிருக்கிறதே!

* இடலே சுதா, குளத்தூர்.

**? 'வரலாற்றுக் குப்பைத் தொட்டிக்குள் சிறுபான்மை அரசு தூக்கி எறியப்பட்டு விட்டது' என்ற ஜெயலலிதாவின் வர்ணனை பற்றி?**

! வரலாறு என்பது குப்பைத் தொட்டியல்ல என்பதை அவருக்கு விஷயம் தெரிந்த யாராவது சொல்லித் தந்தால் தேவலாம்.

* எஸ். அரிஅரன், திருநெல்விக்காவல்.

**? சிதம்பரம் தீட்சிதர்களின் குடும்பங்களில் பதினாறு ஜோடிகளுக்குப் பால்ய விவாகம், நடத்தி வைக்கப்பட்டிருக்கும் நிகழ்ச்சி, அவர்களின் கண்மூடித்தனமான மத ஈடுபாட்டிற்குக் குழந்தைகளைப் பலிகடா ஆக்குவது போலல்லவா இருக்கிறது?**

! சிதம்பரம் தீட்சிதர்களைப் பொறுத்த வரையில் திருமணமாகாத ஆண்மகன் (எத்தனை வயதாயிருந்தாலும் சரி) கோயிலுக்குள் சென்று பூஜை செய்யக் கூடாது என்று ஒரு கோட்பாடு வைத்திருக்கிறார்கள். அதன் விளைவே இந்தப் பால்யத் திருமணங்கள்! இம்மாதிரி நிகழ்ச்சிகள் தடுக்கப்பட்டே ஆக வேண்டும். இதற்காக மதச் சம்பிரதாயங்களை மாற்றிக் கொள்வதால் எந்த ஆசாரமும் தவறிப் போகாது என்று போதிக்க மதத் தலைவர்கள் முன்வர வேண்டும்.

* ஆர். சாய்சங்கர், சென்னை — 54.

**? இப்போதுள்ள சூழ்நிலையில் ஜெயலலிதா — இ.காங்கிரஸ் கூட்டணி வெற்றி பெற்றால் நெடுஞ்செழியன்தான் முதல்வர் என்று ஜெயலலிதா கூறுவாரா?**

! அதானே கேட்கிறேன், கூறுவாரா அப்படி? அவருக்கு அந்த தர்மசங்கடத்தை ஏற்படுத்தி வைக்காமல் நெடுஞ்செழியனே சொல்லி விட்டாரே, 'ஜெயலலிதா தலைமையை ஏற்று ஆட்சியைப் பிடிப்போம்' என்று! இலவு காக்கும் கிளியாக இருப்பது அவருக்குப் பழகிப் போனது.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

**? எம்.ஜி.ஆர். கோயிலுக்கு யாரை அர்ச்சகராக நியமித்தால் பொருத்தமாக இருக்கும்?**

! அர்ச்சகராகவா! எல்லாவற்றுக்கும் வசதியாக அனைவரும் டிரஸ்டிகளாக இருக்கவே பிரியப்படுவார்கள் நண்பரே!

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

பி. ராஜசேகர்,
2/40, "சுந்தர் பவனம்,"
கஸ்டம்ஸ் காலனி,
திருப்பாலை போஸ்டு, மதுரை — 14.

# போஸ்டர் அடித்து ஒட்ட வேண்டும்!

* தமயந்தி எழுதிய 'நிஜங்கள்' சிறுகதையின் நடை மிகச் சரளமாக இருந்தது. நிஜமனிதனைக் காணத் துடிக்கும் தாரணியின் தேடல் யதார்த்தமானது.

ஸ்ரீரங்கம். சி. சௌரிராஜன்.

* தராசு சிந்திக்க வைப்பதில் மட்டுமல்லாமல் சிரிக்க வைப்பதிலும் மன்னன் என்பதற்கு, பி.காம். படித்தவருக்கு எம்.காம். பட்டம் வழங்கிய பல்கலைக் கழகம் பற்றிய கேள்விக்கு அவரின் நகைச்சுவையான பதிலே சான்று!

பெங்களூர் — 25. கே. ஜி. எஸ்ப். பழனிச்சாமி.

* 'இழப்பு' சிறுகதை ஒரு பக்கம்தான் என்றாலும் உள்ளத்தைத் தொடுவதாக அமைந்திருந்தது.

காரைக்குடி. கலைப்பிரியன்.

* "வார்த்தை ஜாலம் வளம் பெருக்குமா" கட்டுரையை எழுதியவருக்கு எனது நன்றிகள். தற்போதைய பொருளாதார நிலையில், பங்கு மார்க்கெட்டில் பணம் போட்டால் கலமாக லாபம் வரும் என்று நம்பிச் செயல்படும் நடுத்தரவர்க்கத்தினருக்கும் இக்கட்டுரை நிச்சயம் உதவி செய்யும்.

இராணிப்பேட்டை. பேப்பர் கார்த்திக்.

* பதவியையும், பணத்தையும் மதிக்காமல், ஹிந்து, முஸ்லிம் ஒற்றுமைக்காக அரும்பாடுபட்டு, வாழ்நாள் முழுவதும் பொது மக்களுக்காகத் தம் வாழ்வை அர்ப்பணித்து மறைந்த கான் அப்துல் கஃபார் கான் வாழ்க்கை வரலாறு பாட புத்தகங்களில் பாடமாக வெளிவர வேண்டிய ஒன்று.

லால்குடி. எம். ராஜேந்திரன்.

* ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு திரைவிழாப் படக்கதையை, சிறுகதை போல் வெளியிட்டுத் திரைவிழாப் படத்தை நேரில் காணமுடியாத குறையைப் போக்கி வருகின்ற கல்கிக்கு எங்கள் நன்றியையும், பாராட்டையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

விருதுநகர். திருமதி கல்பனா.

* 'எத்தனையோ மனு போட்டு விட்டோம். மாநகராட்சி கவனித்தபாடில்லை' என்று சும்மா இருக்காமல், பொறுப்புணர்வுடன் நடந்து கொண்ட வரதப் பிள்ளைத் தெரு இளைஞர்கள் பாராட்டப்பட வேண்டியவர்கள். தமிழ்நாட்டுக்கே இவர்களின் செயல் ஓர் உன்னதமான வழிகாட்டி!

செம்பொன்னார்கோவில். எஸ். வி. ஏ. பிரகாஷ்.

* நாயர் வரதப்பிள்ளைத் தெரு சங்கத்தினர் செய்து காட்டிய பொதுச் சேவை, எங்களைப் போன்ற பொது நலத் தொண்டர்களுக்கு உற்சாகமும் வழிகாட்டியாகவும் உள்ளது. இந்தச் செய்தியை வெளியிட்ட கல்கிக்கு நன்றி.

ஆலந்தூர். இரா. அற்புதராசு.

* 'சிறந்த பெற்றோர்களாய் விளங்க...' என்ற கவர் ஸ்டோரியை ஒவ்வொரு பெற்றோரும் கட்டாயம் படிக்க வேண்டும். படித்து அதன்படி நடக்க வேண்டும். அப்படிச் செய்தார்களேயானால், இன்றைய இளம் மொட்டுக்கள் நாளைய தினம் நல்ல மணம் பரப்பும் மலர்களாக மாறும் என்பது நிச்சயம்.

நந்தியநல்லூர். நிலாப்ரியன்.

* மனோதத்துவ நிபுணர் திருமதி வில்வி நீலங்காவின் பேட்டிக் கட்டுரையைப் படித்தது முதல் என் குழந்தையினிடத்தில் இதுவரை எவ்வளவு தவறாக நடந்து கொண்டிருக்கிறேன் என்பதை நான் இப்போது உணருகிறேன். என் போன்ற தாய்மார்களுக்கு எல்லாவிதத்திலும் உதவக் கூடியதாக இருந்தது. அவருக்கு ஆயிரம் ஆயிரம் நன்றிகள்!

தஞ்சாவூர் — 7. அலமேலு கண்ணன்.

* நீண்ட கால இடைவெளிக்குப் பின் வெளியான மாறுதலான அட்டைப் படம் கண்ணுக்கு விருந்தளித்தது.

நெய்வேலி — 3. ப. உத்தண்டராமன்.

* 'ஜனவரி இருபத்தெட்டு' தலையங்கத்தின் கடைசி வரியைக் கண்டேன். 'அனுதாப அலை எம். ஜி. ஆருக்குத்தான். இந்தக் காட்டுமிராண்டிக் கும்பல்களுக்கு இல்லை' என்ற வரி சரியான சாட்டையடி!

சென்னை — 11. வண்ணை கணேசன்.

* 'ஜனவரி இருபத்தெட்டு' தலையங்கத்தைத் தன்மானத் தமிழன் எவனும் மறக்கவே மாட்டான்.

சென்னை — 21. எஸ். முகமது காசிம்.

* "ஜனவரி இருபத்தெட்டு" தலையங்கம் சிந்தனைக்குரியது; முக்கியத்துவம் வாய்ந்தது! குழப்பத்திற்கும் கலவரத்திற்கும் காரணமாயிருந்த இ.காங்கிரஸ், அ.தி.மு.க. கோஷ்டிகளைப் பற்றி இவ்வளவு தெளிவாக யாரும் எழுதிவிட முடியாது! எனக்கு மட்டும் வசதியிருந்தால் தமிழகம் முழுவதும் கல்கியின் தலையங்கத்தைப் பெரிய எழுத்துக்களில் அச்சடித்து நாடு முழுவதும் ஒட்டிவிடுவேன்! தமிழன் தன்மானம் உள்ளவன்தான் என்பதை நிரூபிக்க வேண்டிய தருணம் வந்து விட்டது! ஏனெனில் அது காலத்தின் கட்டாயம்!

நாச்சியார்கோவில். எம். கல்யாணசுந்தரம்.

* அண்மையில் தமிழகம் முழுவதும் நடைபெற்ற 'நில உடைமை மேம்பாட்டுத் திட்டத்'தின் கீழ் சில நில அளவையாளர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட காலக் கெடுவுக்குள் நில அளவைப் பணிகளைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று அவசர கதியில் இயங்கிய காரணத்தால், ஒன்றும் அறியாத—படிப்பறிவில்லாத ஏழை விவசாயிகள் பட்ட — படுகின்ற துன்பம் கொஞ்சநஞ்சமல்ல! புதியதாகக் கொடுக்கப்பட்ட பட்டாக்களில் விஸ்தீரணம் குறைந்து காணப்படுவதும், சம்பந்தமே இல்லாத நபர்களுக்குப் பட்டா கொடுத்ததால் வீண் வழக்குகள் பெருகுவதும் சகஜமாக உள்ளது. வழக்குரைஞர் என்ற தொழில் முறைமையில், பாதிக்கப்பட்ட மக்களின் அவதியைக் கண்கூடாகக் காண்கிறேன்.

விருத்தாசலம்,— 1. கோ. பாலசந்திரன்.

# என் உயிர் கண்ணம்மா



ஒரு காட்டுக்குப் பக்கமான கிராமத்தில் லட்சுமி டீக்கடை நடத்துகிறார். அது மட்டுமல்ல;

எப்படி நடிக்க வேண்டும் என்று சின்—பை—சின் புதிய நடிகைகளுக்குப் பாடமும் நடத்துகிறார்.

சிவச்சந்திரன் காக்கிச் சட்டை அணிந்து லாரி ஓட்டுகிறார். அது மட்டுமல்ல;

கறுகறுப்பாகத் திரைக்கதையை அமைத்து, ஆரவாரமில்லாமல் ஆனால் அழுத்தமாக டைரக்ஷனைக் கையாண்டு, புதிய துறையாயிற்றே, தேறி விடுவாரா என்கிற நம் சந்தேகத்தை விரட்டுகிறார்.

பிரபு கொடுக்கப்பட்ட பாத்திரத்தை நன்றாக அலம்பித் துடைத்து மெருகேற்றியும் வைக்கிறார். அது மட்டுமல்ல; நடிப்பில் அப்பாவைப்போலவே சின்சியராகச் செயல்பட்டு அசத்துவதை மறைமுகமாகத் தயாரிப்பாளர்கள் காதில் போட்டு வைக்கிறார்.

ராத்ா — நடிப்புக்கு சான்ஸ் கம்மி. துடிப்புக்கு சான்ஸ் அதிகம்.

வி. கே. ராமசாமி, ராதாரவி, சந்தான பாரதி — கேரக்டர்கள் கச்சிதம்.

கிளைமாக்ஸ் மட்டும் கொஞ்சம் செயற்கை.

மலையாளம் கலந்து லட்சுமி பேசுகிற தமிழ் கேட்க வெகு இனிமை.

'யாரைக் கேட்டு தென்றல்' பாட்டு சுகம்.

ஒளிப்பதிவு கதைக்குச் சிறப்புச் சேர்த்திருக்கிறது.

கொஞ்சம் சிக்கலான தீமை எடுத்துக் கொண்டு அதை விரசமில்லாமல் தந்திருப்பதே டைரக்டரின் சாமர்த்தியம்தான்!

— ஜெயமன்மதன்



''சிஷ்யா, நான் செய்த 'சாதனை'யா நீ எதை நினைக்கிறே?''

''ஒரு முறை நீங்க மேடையிலே பாடிக்கிட்டிருந்த போது கூச்சல், கைதட்டல், கலாட்டா எதையுமே பொருட்படுத்தாமல் கடைசியா கல்லடி பட்ட பிறகு பாட்டை நிறுத்தினீங்களே... அந்தச் 'சாதனை'யை மறக்கவே முடியாது...!''

— அ. தெய்வசிகாமணி.

''உங்க வீட்டில் திருடு போன பொருட்களைத்தான் போலீஸ் கைப்பற்றி விட்டதே. அப்புறம் ஏன் வருத்தமா இருக்கீங்க?''

''இனிமேல் அவங்ககிட்டேயிருந்து எப்படிக் கைப்பற்றுவதுன்னுதான்!''

— கீழை. அ. கதிர்வேல்.





சிஷ்யன்: கிருஷ்ணா நதி நீர் சென்னைக்கு எப்ப வரும்னு ஞான திருஷ்டியில் பார்த்து உங்களால் சொல்ல முடியுமா, குருவே?

குரு: முடியாது சிஷ்யா! கி. பி. 2088 வரை பார்த்துச் சொல்கிற ஞான திருஷ்டி சக்தி மட்டுமே எனக்கு உண்டு!''

— உ. ராஜாஜி.

மானேஜர்: ஆபீசுக்கு, ஏன்யா லேட்டு?

பியூன்: ரேஷன் கடைக்குப் போயிட்டு வந்தேன், சார்.

மானேஜர்: உன்னை யாருய்யா, ஆபீஸ் டயத்திலே போகச் சொன்னது?

பியூன்: உங்க மனைவிதான் சார்!

— ஆர். அப்துல் சலாம்.



பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

உங்கள் தாய் உங்களுக்குச் சொன்ன கதைகள் நினைவிருக்கா? அந்தக் காலத்தில் எப்படி பெண்கள் மாதத்தில் 5 நாட்களில் சானிடரி பாதுகாப்பிற்கு பழைய வீட்டு முறைத் தயாரிப்புகளை நம்பியிருந்தார்கள் என்பதைக் கேள்விப்பட்டிருப்பீர்கள். இப்போது காலம் மாறிவிட்டது. இன்று, ஒரு பெண்ணுக்கு கேர்:ஃப்ரீ போன்ற சரியான சானிடரி பாதுகாப்புக் கிடைத்தால் அவள் விருப்பம் போல் எதையும் செய்யமுடியும். ஏன் வேண்டும் கேர்:ஃப்ரீ?

காரணம், காலம் மாறுகிறது. அதற்கேற்ப நீங்களும் மாறுகிறீர்கள்.

இன்று நீங்கள் வாழும் காலம் உங்கள் தாய் வாழ்ந்த காலத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது. இன்று மாதத்தின் அந்த 5 நாட்களில் நீங்கள் எப்படியும் வீட்டிற்குள் முடங்கிக் கிடக்கவோ வெளியில் செல்வதை கட்டுப்படுத்திக் கொள்ளவோ முடியாது. ஆகவே சரியான சானிடரி பாதுகாப்புத் தேர்ந்தெடுப்பது மிகவும் முக்கியம்.

மாறிவரும் இன்றைய உலகிற்கு கேர்:ஃப்ரீ ஏன் ஒரு ஒப்பற்ற தேர்வாகும்?



## உலர்வும் சுகமும்

கேர்:ஃப்ரீ, வேறு எந்த சாதாரண நாப்கினை விட மிகவும் சிறந்தது; காரணம், அது சுகாதாரமிக்கது, முழுமையான பாதுகாப்புத் தருகிறது.

கேர்:ஃப்ரீ அதிகம் உறிஞ்சக் கூடிய அடுக்குகள் கொண்டது. அவை மாதவிலக்கினை விரைவாக நாப்கினிற்குள் ஈர்த்துக் கொண்டு, உங்களுக்கு உலர்வான உணர்வினையும் சுகத்தையும் அளிக்கிறது... எப்போதும்.

அதிகமாக மாதவிலக்கு வரும் நாட்களுக்காக கேர்:ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ் உள்ளது. நீண்ட, அகன்ற, தடிப்பான நாப்கினை இது, உங்களுக்கு கூடுதல் பாதுகாப்பையும் பத்திரமான உணர்வையும் அளிக்கிறது, உங்களுக்குத் தேவைப்பட்ட போதெல்லாம்.

இப்போது, நீங்கள் புத்துணர்ச்சியும் பெண்மை உணர்வும் பெற்றிட, கேர்:ஃப்ரீ டியோடரண்ட் சானிடரி நாப்கினை தேர்ந்தெடுங்கள். அதன் டியோடரண்ட், மாதவிலக்கின் வாடையைக் குறைக்கிறது; ஆகவே நீங்கள் நாளெல்லாம், சுத்தமாகவும் புத்தம் புது மலர்ச்சியோடும் விளங்குவீர்கள்!

கேர்:ஃப்ரீ உபயோகிக்கும் போது, மாதத்தின் இதர நாட்களைப் போலவே, அந்த ஐந்து நாட்களையும் உணருவீர்கள். ஆகவே நீங்கள் இன்னும் சாதாரண நாப்கின் களையே உபயோகித்து வந்தால் கேர்:ஃப்ரீக்கு மாறவேண்டிய சமயம் இதுதானே. மாறிவரும் காலத்தோடு நீங்களும் மாற வேண்டாமா?



இன்றைய மாறிவரும் காலத்திற்கேற்ற கேர்:ஃப்ரீ பாதுகாப்பு விவரம்

| | |
|---|---|
| ரெகுலர் | முழுமையான பாதுகாப்பு மற்றும் பத்திரம். |
| எக்ஸ்ட்ரா லார்ஜ் | அதிகமான மாதவிலக்கு மற்றும் இரவிலும் உபயோகத் திறகான கூடுதல் பாதுகாப்பு. |
| டியோடரண்ட் | முழுமையான பாதுகாப்பு அத்துடன் வாடையற்ற புத்துணர்ச்சி. |




# கேர்:ஃப்ரீ.* காரணம், காலம் மாறிவருவதற்கேற்ப நீங்களும் மாறுகிறீர்கள்.

ஜான்சன் அண்ட் ஜான்சன்

OBM/2406/TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

வினாடிகளில் நிவாரண
மளிக்கும் பாம்!



## ஜண்டு பாம்

ஜலதோஷம், தலைவலி
மற்றும் நோவுகளிலிருந்து
துரித நிவாரணம்




OFFICIALLY SELECTED BY
RELIANCE CUP '87

## ZANDU BALM




CRICKET FOR PEACE

ஜண்டு பாம் பலவகை வலிகளையும் நீக்குவதில், இதர பாம்களைவிட, அதிக சக்தி வாய்ந்த வலி நிவாரணி.

தலைவலி, ஜலதோஷம், தசைப்பிடிப்பு, மூட்டுவலி, மற்றும் சுளுக்கு ஆகியவைகளிலிருந்து நிவாரணமளிக்கிறது.

ஜண்டு பாம் ஈடு இணையற்றது: நிறமற்றது—அதனால் கறை படியுமோ என்ற பயமில்லை. பிசுபிசுப்பற்றது—அதனால் வீட்டிலோ வெளியிலோ உபயோகிக்கலாம். நறுமணமும் கொண்டது. ஜண்டு பாம் வீரியமிக்க ஃபார்முலா கொண்டதால் குறைவாக உபயோகித்தால் போதும். அதனால் சிக்கனமானது. மிருதுவான சருமத் திற்கும் உகந்தது. அதனால்தான் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஜண்டு பாமையே தடவ விரும்புகிறார்கள்.

சீசாவின்மேல் இருக்கும் சிகப்பு சீலைப் பார்த்து வாங்குங்கள்

# ஜண்டு பாம்
## வலிகளை நீக்கும் பாம்

Z-2-87 TAM